# இயற்கையான சந்தனத் தைலத்தின் செழுமை

மைசூர் சாண்டல் சோப்பில் பரிமளிக்கிறது

## மைசூர் சாண்டல் சோப்

– ஒரு மோகன ஸ்பரிசம்




தயாரிப்பவர்கள் : கர்நாடக சோப்ஸ் அண்ட் டிட்டர்ஜெண்ட்ஸ் லிமிடெட்

விற்பனையாளர்கள் :
மைசூர் சேல்ஸ் இண்டர்நேஷனல் லிமிடெட்

MCA/MSS/65-Tam

# 'பதி இல்லாமல் ஏது சதி?'!

OH JAYA !
HOW CAN YOU COMMIT
'SATI'
WHEN NO
'PATI'

அண்மையில் செல்வி ஜெயலலிதா ஒரு கூட்டத்தில் பேசும்போது, திடுக்கிட வைக்கும் தகவல் ஒன்றை வெளியிட்டார். தம் தலைவர் எம். ஜி. ஆர். இறந்தபோது தாமும் உடன்கட்டை ஏற எண்ணியதாகக் கூறினார். ஜெயலலிதாவின் இந்தப் பேச்சு பல முக்கியமான பத்திரிகைகளில் சுவாரசிய மான தகவலாக வெளியிடப்பட்டது.

இதைத் தொடர்ந்து பம்பாயில் சர்ச்கேட் பகுதியைச் சேர்ந்த மரீன் டிரைவ் சாலையில் நானு சுதாஸாமா எனும் பிரபல சமூக சேவகர் பின்வரும் பேனரை நிறுவினார்.

**OH JAYA!**
**HOW CAN YOU COMMIT**
**"SATI"**
**WHEN NO**
**"PATI."**

நானு சுதாஸாமா பல வருடங்களாக நாட்டு நடப்புக்களைக் குறித்துச் சுவாரசிய மாகவும், சிந்தனையைத் தூண்டும் விதத்திலும் பேனர் எழுதச் செய்து, நிறுவி வருகிறார். சுமார் பத்து நாட்களுக்கு ஒருமுறை மாற்றப் படும். இந்த பேனர் பம்பாயில் மிகவும் பிரசித்தம். மரீன் டிரைவ் சாலையில் செல் பவர்களுடைய கண்ணில் தப்பாமல் படும் சுதாஸாமாவின் எழுத்துக்கள்.

மேற்கண்ட பேனரை நிறுவிய நாலைந்து நாட்களுக்குள் பம்பாய் பத்திரிகையாளர் சங்கத்தின் அங்கத்தினர்களான சில மாதர்கள் நானு சுதாஸாமாவிடம் அந்த பேனரைக் குறித்துத் தங்கள் கண்டனத்தை வெளிப்படுத்தினர். சதி, அதாவது உடன் கட்டை ஏறுவது என்பதை, இப்படி கேலிக்குரிய விஷயமாக யாரும் எடுத்துக் கொள்ளக் கூடாது என்பதே அவர்கள் வாதம். அதேநேரத்தில் அப்பெண்மணிகள் ஜெயலலிதாவின் அறிவிப்பையும் கடுமை யாகக் கண்டனம் செய்தார்கள்.

நானுசுதாஸாமாவும்பெருந்தன்மையுடன் சர்ச்சைக்குரிய அந்த பேனரைச் சென்ற வியாழனன்று (18.2.88) மாற்றி விட்டார்.

இப்படியாக ஜெயலலிதாவின் அறிவிப்பு பம்பாயில் கேலி கலந்த ஒரு சிறிய சல சலப்பை ஏற்படுத்தியது. ஆனால் இம்மாதிரி சலசலப்புகளுக்கெல்லாம் அஞ்சுகிறவர் களா தமிழ்நாட்டு அரசியல்வாதிகள்?

— ஜி. சந்திரசேகர்

# கொடுமைக்குள்வாகும் அழகைக் குழந்தைகள்!

பிஞ்சுக் குழந்தைகளை இம்சிக்கக் கூடாது என்று நமது அரசியல் சாசனத்திலேயே அழுத்தம் திருத்தமாகக் கூறியிருக்கிறது. வறுமை காரணமாகக் குழந்தைகள் தங்கள் சக்திக்கும், வயதுக்கும் மீறிய வேலைகளை மேற்கொள்ளும் நிலைக்கு வந்துவிடக் கூடாது. அவர்களுக்குத் தக்க பாதுகாப்பு அளிப்பது அரசின் கடமை. ஆனால் இன்றைய இந்தியாவில் குழந்தைகளின் நிலை என்ன என்று பார்த்தால் கண்ணீர் வருகிறது! இந்தப் புள்ளி விவரங்களைப் பாருங்கள்... *1971* — கணக்கெடுப்புப்படி உலகம் முழுவதும் 5.2 கோடி உழைக்கும் சிறுவர்கள் இருந்தார்கள். அதில் ஆசியாவில் 3.8 கோடி! இந்தியாவில் 1.4 கோடி! '83 ஆம் ஆண்டு எடுத்த கணக்குப்படி திருப்பத்தூரில் மட்டும் உழைக்கும் சிறுவர்களின் எண்ணிக்கை 1403. இப்பொழுது அந்த எண்ணிக்கை சுமார் இரண்டாயிரத்தை எட்டியிருக்கும்.

திருப்பத்தூர் கடைத் தெருவில் காலடி வைத்ததுமே நம் கண்ணில் படுபவர்கள் அந்தச் சிறுவர்கள்தான் — அரை நிக்கரில் — கிழிந்த சட்டையில் — காய்ந்த, சோர்ந்த கறை படிந்த முகங்களுடன், வயதுக்கு மீறிய முதிர்ச்சியைக் கண்களில் தேக்கிக் கொண்டு ஏதோ பாரத்தைச் சுமப்பதுபோல் முதுகைக் கூனிக் கொண்டு, கருமமே கண்ணாயைக் கொடுத்த வேலையைச் செய்து கொண்டு... (இல்லாவிட்டால் முதுகில் அடி விழும் அல்லது வேலை போகும், வீட்டில் அடுப்பெரியாது...)



தேவேந்திரன்

முதலில் பார்வையில் பட்டது ஒரு 'வெல்டிங்' கடை. அதில் மூன்று சிறுவர்கள் இரும்புக் கம்பிகளைத் தட்டிக் கொண்டும் கொட்டிக் கொண்டும் இருந்தார்கள். கேள்வி கேட்டுக் குறிப்பெழுதிக் கொண்டபோதும் புகைப்படங்கள் எடுத்த போதும், நீங்கள் என்ன எழுதினாலும் எங்களுடைய தலையெழுத்து மாறப் போவதில்லை என்கிற நிச்சயத்துடன் தங்கள் வேலையில் ஈடுபட்டிருந்தார்கள். முதல் சிறுவனின் பெயர் மாதவன். பதின்மூன்று வயது. ஐந்தாம் வகுப்பு வரை படித்திருக்கிறான். "ஏன் மேலே படிக்கல்லே?" என்று கேட்டபோது, "அப்பா நிறுத்திட்டாங்க" என்றான்.

வீட்டில் பத்துப்பேர். அப்பா பஸ்ஸ்டாண்டில் கூலி வேலை செய்பவர். இவனுக்கு இங்கு மாதம் ஐம்பது ரூபாய்ச் சம்பளம். காலை எட்டு மணிக்கு வந்து இரவு எட்டு மணி வரை வேலை. வீட்டிற்குத் திரும்பிய

கட்டட வேலை செய்யும் சிறுவர்கள்.

பின்தான் சாப்பாடு!

அடுத்தவன் கோபி. வயது பன்னிரண்டிருக்கும் என்றான். மூன்றாவது வரை படித்திருக்கிறான். வீட்டில் அவனைத் தவிர மூன்று பேர்கள். அப்பா ஸ்டீல் வியாபாரம் செய்கிறார். இவனுக்கும் ஐம்பது ரூபாய்ச் சம்பளம். காலை எட்டிலிருந்து இரவு எட்டு வரை வேலை.

ரமேஷுக்குப் பதினைந்து வயது. மற்றவர்கள் புகைப்படங்களுக்குப் போஸ் கொடுத்த போது 'வேலையைக் கவனியுங்கடா' என்று அதட்டினான். மூன்று மாதமாகத்தான் இங்கு வேலையாம். ஆறு மணிக்கே வந்துவிடுகிறான். அப்பா அம்மா இல்லை. உறவினர் வீட்டில் சாப்பாடு. இங்கு வாரத்துக்கு இருபது ரூபாய் கிடைக்கிறது.

''வேலை பிடிச்சிருக்கா?''

''பிடிச்சிருக்கு. வேறெவழியில்லே'' என்று சிரிப்பில்லாமல் பதில் வந்தது.

அடுத்தது ஒரு ஸ்கூட்டர் ரிப்பேர்க் கடை. இரண்டு மூன்று சிறுவர்கள் சுறுசுறுப்பாக இயங்கிக் கொண்டிருந்தார்கள். செல்வத்துக்குப் பன்னிரண்டு வயது. சங்கருக்குப் பதின்மூன்று வயது. இருவரும் ஆறாம் வகுப்பு வரை படித்திருக்கிறார்கள். படிப்பிலே ஆசை இருந்தது. ஆனால் அப்பா நிறுத்தி விட்டார். காலையில் எட்டு மணிக்கு வருவார்கள். இரவு ஒன்பது மணி வரை வேலை. சாப்பாடு இங்கேயே.

கூலி?

கூலி எதுவும் கிடையாது.

''அவங்க வேலை கத்துக்கறாங்க அம்மா'' என்று விளக்கினார்கள் பெரியவர்கள். ''கூலின்னு, தீர்மானமா கிடையாது. இது 'ரொட்டேஷன்'லே போகும். இவங்களுக்குப் பிறகு வேறே பிள்ளைங்க வருவாங்க... அப்ரென்டிஸ் வேலைக்குக் கூலி ஏது?

தெருவோரத்தில் உட்கார்ந்து லாடம் அடித்துக் கொண்டிருந்த பெருமாளுக்கு உடலில் ஊனம். **Sacred Heart** கல்லூரி நடத்தும் **CLAP (Child Labour Apprenticeship Programme)** இல் சேர்ந்தவன். இன்று அங்கு செல்லாமல் இங்கு உட்கார்ந்திருக்கிறான் — ஐந்து ரூபாய் கூலி கிடைக்கிறது என்று.




* மெகானிக் கடையில்...



* ஹனீஃபா, அஸ்லம், ரெஹ்மான்

எதிர்த்தாற்போல் ஒரு சைக்கிள் ரிப்பேர்க் கடை. அதில் சில் வண்டாய் ஒரு பையன். பெயர் முருகன். வயது பத்து. நீரையே கண்டதாகத் தெரியவில்லை. அவன் உடம்பும் தலையும். சுலபமாகச் சிரித்தான். பளிச் சென்று பதில் சொன்னான்.

''அப்பா ஸ்கூல்லே சேக்கலே. படிக்கல்லே.''

''வீட்டிலே எத்தனை பேர்?''

''ஆ. இருக்கறாங்க. பொட்டைங்க மூணு. ஆம்பளைங்க மூணு.''

''என்ன வேலை?''

''சைக்கிளுக்குக் காத்தடிக்கிறது. பங்சர் பார்க்கிறது. காலையிலெஎட்டுமணியிலேர்ந்து ராத்திரி எட்டு மணி வரை வேலை செய்யணும்.''

''கூலி?''

''ஒரு நாளைக்கு ஐம்பதுபைசா. அதை வீட்டிலே கொடுத்துடணும். ஞாயித்துக்கிழமை லீவு. துட்டு கிடைக்காது!''

தெருவோர மக் கடையில் வேலை பார்க்கிறான் செல்வம். வயது பன்னிரண்டு. படிக்கவில்லை. அப்பா அம்மா பீடி சுற்றுபவர்கள். இருப்பத்தூரிலிருந்து இரண்டு மைல் தொலைவில் இருக்கும் சின்ன மூக்கனூரில் உள்ளது இவன் வீடு.

''தினமும் நடந்தா வேலைக்கு வர்றே?''

''இல்லே. இங்கேயேதான் படுக்கை. வாரத்துக்கு ஒரு தடவை வீட்டுக்குப் போவேன்.''

''என்ன வேலை செய்யறே?''

"மேஜை துடைக்கிறது, டீ கொடுக்கிறது, பாத்திரம் கழுவறது..."

"என்ன சம்பளம்?"

"சம்பளம் ஒண்ணுமில்லே. சாப்பாடு ஒண்டிதான்."

"இப்பத்தான் வேலைக்குச் சேர்ந்திருக்கான்" என்றார் முறைப்புடன் அருகே நின்றிருந்த முதலாளி.

பையன் மௌனமாக மேஜையைத் துடைத்த வண்ணம் நின்றான். இவன் என்றாவது சிரித்திருப்பானா என்ற சந்தேகத்துடன் நடையைத் தொடர்ந்தோம்.




கட்டட வேலை பார்க்கும் தேவேந்திரனின் கதை இன்னும் மோசம். தனக்கு வயது பதினைந்து இருக்கும் என்கிறான்: ஆனால் பன்னிரண்டுதான் சொல்லலாம்.

"நாலைஞ்சு வருஷமா வேலை பார்க்கிறேன். கல்லு இடிப்பேன்; சிமெண்ட் கலப்பேன்; சேறு கலக்குவேன்; ஒரு நாளைக்குப் பத்து ரூபாய்ச் சம்பளம். அப்பா விவசாயம் செய்யறாங்க; ஆனால் சொந்த நிலமில்லே: ரொம்பக் குடிப்பாங்க."

"உன் சம்பளத்தை அம்மாகிட்டக் கொடுப்பியா?"

"இல்லே!"

அவனுடன் இருந்த மற்ற சிறுவர்கள் விளக்கினார்கள். அவனுடைய் அப்பா யாரிடமோ ஐந்நூறு ரூபாய் கடன் வாங்கியிருக்கிறார். கடன் கொடுத்தவர் வீட்டில் இவன் ஆளாக இருக்கிறான். "காலை அஞ்சு மணிக்கு எழுந்து சாணிவாரி, பால் கறந்து, மாட்டுக்குத் தீனி வெச்சு, மாட்டுக் கொல்லையைச் சுத்தப் செஞ்சு, ஒன்பது மணிக்குக் கட்டட வேலைக்கு வந்து, ஆறு மணி வரை வேலை செய்து, அன்றாடம் கிடைக்கும் ஊதியத்தையும் வீட்டுக்காரரிடம் கொடுத்து விடுகிறான்." என்றார்கள்.

"கடன் தீரல்லியா இன்னும், நாலைஞ்சு வருஷமா வேலை செய்யறியே?"

"இல்லே!"

அவனுடைய ஊதியமெல்லாம்வட்டியைக் கழிக்கவே போகிறது என்று யாரோ விளக்கினார்கள். இவனுடைய குடிகாரத் தந்தை எப்பொழுது முதலைத் திருப்புவது, இவன் எப்பொழுது மீள்வது?

"சாப்பாடு?"

"சோறும் களியும் கிடைக்கும்."

தேவேந்திரனுடன் வேலை செய்யும் சங்கருக்கு வயது பதின்மூன்று. எட்டாவது வரை படித்திருக்கிறான். "படிக்கணும்னு ரொம்ப ஆசை. அப்பா குடிச்சுக் குடிச்சு எல்லாத்தையும் அழிச்சுட்டாங்க. 'படிச்சது போதும் கல்லைத் தூக்கு, போடா' ன்னுட்டாங்க. கூலியை அம்மாகிட்டக் கொடுத்துடுவேன்." என்றான்.

ஹஸீனா, அஸ்லம், ரெஹ்னா என்ற மூன்று பெண்களும் பீடித் தொழில் செய்யும் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். இவர்களுடைய நிலைமையின் பரிதாபத்தை அவர்களைச் சேர்ந்தவர்களே உணருவதில்லை. மூன்றாவது வயதிலிருந்தே இந்தக் குழந்தைகள் இந்தத் தொழிலில் சேர்க்கப்பட்டு விடுகிறார்கள். இலையின் நரம்பை அகற்றும் வேலையை மூன்று வயதுக் குழந்தை செய்கிறது! பெற்றோருடன் காலையிலிருந்து மாலை வரை இக் குழந்தைகள் 'புர்னி' மூடுவதில் ஈடுபடுகின்றனர் (அட்டைப்படம்). பெற்றோர்களுடனேயே வீட்டு வேலைபோல் இதைச் செய்வதால் குழந்தைகளுக்குத் தனிப்பட்ட கூலி கிடையாது! படிப்பு கிடையாது, பொதுவான பேச்சு, கேளிக்கை எதுவும் கிடையாது. அவர்களிடையே சிரிப்புக் கூட அபூர்வம். பீடித் தொழிலில் பத்து வயதுக்குட்பட்ட குழந்தைகளை அடமானம் வைப்பது சர்வ சகஜம். தாய் தகப்பன் வாங்கிய கடனுக்காகக் குழந்தைகள் நாள் முழுவதும் ஒரு சின்ன அறையில் அடைபட்டுப் பீடி சுற்று


• [illegible]



வது ஓர் அங்கீகரிக்கப்பட்ட சுரண்டல். புகையிலைத் தொடர்பால் இந்தக் குழந்தைகளுக்கு டீ.பி., பார்வை மங்கல் போன்ற உபாதைகள் வருவதோடு, நாள் முழுதும் ஒரு சிறிய இடத்தில் அடைபட்டுக் கிடப்பதால் கழுத்து, இடுப்பு வலி போன்றவை வந்து, வேறு எந்தத் தொழிலுமே செய்ய லாயக்கற்றவர்களாகிறார்கள்.

ரமேஷ் என்று ஒரு பன்னிரண்டு வயதுப் பையன். 'டயர் உருட்டும் வேலை'யில் இருக்கிறான். கடைக்குக் காலை ஏழு மணிக்கு வந்து விடுகிறான்; இரவு ஒன்பது மணி வரை வேலை. கூலி தினத்துக்கு ஐம்பது பைசா! சமர்த்துப் பிள்ளை; அதைச் சேமிக்கிறான்! எப்படி? தினமும் அதை ஒரு செட்டியாரிடம் கொடுக்கிறான். சேமிப்பு இருபத்தோரு ரூபாய் ஆனதும், செட்டியார் அதை அத்தனை நாட்கள் பாதுகாத்ததற்காக ஒரு ரூபாயைப் பிடித்துக் கொண்டு இவனுக்கு இருபது ரூபாய் கொடுக்கிறாராம்!

நெஞ்சு பதறிப் போகிறது ஒவ்வொரு குழந்தையின் கதையையும் கேட்கும்போது! இவர்களைப் பதினான்கு மணி நேரம் உழைக்க வைத்து, நாலு ஆட்கள் செய்ய வேண்டிய வேலையை வாங்கிக்கொண்டு கூலி கொடுப்பதாகப் பாவனை பண்ணும் முதலாளிகளின் தகிடுதத்தத்தை என்னவென்று சொல்வது? வேலையில் தவறு செய்தால் இவர்கள் கொடுக்கும் கடுமையான தண்டனையை எதிர்க்கும் நிலையில் இவர்கள் இல்லை. இவர்களுக்காக வாதாடும் நிலையில் பெற்றோர்களும் இல்லை. எதிர்த்தால் வேலையும் சொற்ப வருமானமும் போய்விடும்! விடுமுறை என்றால் அன்று உணவும் ஊதியமும் கிடையாது. 'ஏழ்மை' என்னும் இவர்களது இயலாமையே வேலைக்கு வைத்துக் கொள்பவரின் பலம். குறைந்தபட்சக் கூலி கொடுத்துக் காலவரையறையின்றி அதிகபட்ச வேலை வாங்குவது சுலபம் — வேலையில் உத்தரவாதமும் இல்லை. 'அப்ரெண்டிஸ்ஷிப்' என்று ஏமாற்றிக் கூலியில்லாமல் குழந்தைகளின் இடுப்பை ஒடிக்கலாம். கேள்வி கேட்க யாருமில்லை. ஓட்டுரிமை இல்லாத இந்த உழைக்கும் சிறுவர்களுக்கு உதவ எந்த அரசியல்வாதிக்கு அக்கறை? இவர்களை நாளைய இந்தியாவின் முதுகெலும்பாக யாரும் கருதுவதாகத் தெரியவில்லை. இன்றைக்கு இவர்களது முதுகை ஒடித்தால் நாளைக்குத் தேசத்தின் முதுகே ஒடியும் என்று புரிந்து கொண்டதாகத் தெரியவில்லை. அன்பில்லாத, பாதுகாப்பில்லாத, ஏமாற்றி முதுகை ஒடிக்கும் உலகத்தைச் சிறு வயசிலேயே சந்திக்கும் இந்தச் சிறுவர்கள் நாளைக்கு எப்படிப்பட்ட பிரஜைகளாக மாறுவார்கள்...?

“உழைக்கும் குழந்தைகளின் பரிதாப நிலையை உணர்ந்து நேசக்கரம் நீட்டும் சுய முயற்சி நிறுவனங்கள் சில உள்ளன. அவை செய்கிற ஆக்கபூர்வமான வேலைகளுக்கு அரசு முட்டுக்கட்டை போடாமலிருந்தாலே பெரிய உதவி” என்கிறார் திருப்பத்தூர் சேக்ரட் ஹார்ட் கல்லூரியின் சமூக சேவைப் பிரிவின் தலைவர் ஃபாதர் ஜோ அரிம்பூர்.

சில வருஷங்களுக்கு முன் ஒரு நாள் உச்சி வெயிலில் ஃபாதர் ஜோ தெருவில் நடந்து சென்று கொண்டிருந்த போது, ஒரு சிறுவன் சட்டையில்லாமல் தெருவோரக் கல்லின் மேல் உறங்கிக் கொண்டிருந்தானாம். எழுப்பி விசாரித்தபோது, அவன் அருகிலிருந்த ஹோட்டலில் வேலை செய்வதாகவும், முந்தைய இரவு பதினொரு மணி வரை வேலை செய்து சாப்பாடு மிஞ்சாததால் சாப்பாடு கிடைக்காததாகவும், அன்று காலை கைதவறி ஒரு கிளாசை உடைத்ததற்கான தண்டனையாக முதலாளி நாஷ்டாவும், மதியச் சாப்பாடும் கொடுக்கவில்லையென்றும், தெருக் குழாய் நீரைக் குடித்துப் படுத்துவிட்டதாகவும் கண்ணீருடன் சொன்னானாம்.

“என்னை அது உலுக்கிவிட்டது” என்றார் ஃபாதர் ஜோ. இவர்களுடைய நிலைமையைச் சீர் செய்ய, ஏதாவது ஓர் ஆக்கபூர்வமான திட்டம் ஏற்படுத்த வேண்டும் என்று மிகத் தீவிரமாகச் சிந்திக்க ஆரம்பித்தேன். அதன் விளைவுதான் எங்கள் நான்கு அம்சத் திட்டம்.”

அவர்களது திட்டத்தில் முந்நூறு உழைக்கும் சிறுவர்கள் பதிவாகியிருக்கிறார்கள்.



* ஃபாதர் ஜோ அரிம்பூர்

அச்சிறுவர்களைப் பற்றிய முழு விவரங்களுடன், புகைப்படங்களையும் வைத்துள்ளார் ஃபாதர். அச்சிறுவர்களின் உடல் நலம் பேணும் பொறுப்பை ஏற்றதோடு, அவர்களுக்குத் துணி.



மாலை நேர வகுப்புகள்



வெல்டிங் கடையில்

சோப்பு, பற்பொடி, செருப்பு போன்றவை யும் வழங்கி வருகிறார்கள். நோய்வாய்ப் பட்டால் சிபாரிசுடன் ஆஸ்பத்திரிக்கு அனுப்பப்படுகிறார்கள். சமீபத்தில் நடத்திய மருத்துவ முகாமில் அநேகம் குழந்தைக ளுக்கு மாலைக்கண் இருப்பதைக் கவனித்து, வைட்டமின் ஏ ஊசி போட ஏற்பாடு செய் தார்கள்.

பதிவு செய்யப்பட்டுள்ள சிறுவர்கள், மாலையில் சேக்ரட் ஹார்ட் கல்லூரிக்கு வரு கிறார்கள். முறைசாராக் கல்வித் திட்டத்தால் பயனடைகிறார்கள். சில விளையாட்டுக்களும், பாட்டுக்களும், சர்ச்சைகளும் உண்டு. எண் ணும் எழுத்தும் எளிமையான முறையில் கற் பிக்கப்படுகின்றன. சிறு சேமிப்பு ஊக்குவிக் கப்படுகிறது. பள்ளியைப் போல் ஆக்கிவிடக் கூடாது என்பதில் கவனமாக இருக்கிறார் ஃபாதர். அதற்குப்பிறகு பாலும்பிஸ்கெட்டும் வழங்கப்படுகின்றன. இந்த விளையாட்டின் மூலம் அவர்களிடையே ஒற்றுமையை வளர்க் கவும், நீதி, அநீதி பற்றிய பிரக்ஞையை ஏற்படுத்தவும், ஒரு தலைவனுக்குரிய பண்பு களைப் பெறவும் வழி வகுக்கிறார்கள்.

**Child Labour Apprentice Programme (CLAP)** என்ற திட்டத்தின் கீழ் திறமையுள்ள குழந்தை களுக்குத்தொழிற்கல்வி வழங்கஏற்பாடு செய்துள் ளார்கள். இயன்ற அளவில் தொழிலுக்குத் தேவையான உபகரணங்கள் வாங்கிக் கொடுத்தும் உதவுகிறார்கள்.

''திருப்பத்தூரில் இருக்கும் அத்தனை உழைக் கும் சிறுவர்களும் ஒரு நாள் 'டோக்கன் ஸ்ட் ரைக்' செய்தால் இங்கு மார்க்கெட்டே ஸ்தம்

உங்கள் குழந்தைக்கு ஊட்டுங்கள் காய்கறிகளின் சிறந்த சத்தூட்டத்தை!



# :பாரெக்ஸ்®-வெஜ்

## 6 மாதம் முதல்




புதிய ஃபாரெக்ஸ்-வெஜ். இது, வைட்டமின் வளம் செறிந்த காய்கறிகளான காரட், தக்காளி மற்றும் பச்சைப் பயற்றின் இயற்கையான ஊட்டச்சத்துக்களைக் கொண்டதாகும்.

இது, நன்ருக, முன்பே - பக்குவப்படுத்தப்பட்டது. ஆகவே இது, குழந்தையின் மென்மையான வயிற்றின் ஜீரண சக்திக்கு ஏற்றதாகும்.

**:பாரெக்ஸ்—சுவையுடன் வளரும் வழி**

GX/41/203 TML



"என்ன சார் இது. இந்த வேலைக்குப் போன வருஷம் ஐயாயிரம் லஞ்சம் கேட்டீங்க... இப்போ பத்தாயிரம் கேட்கறீங்களே...?"

"இந்தச் சம்பளக் கமிஷன்லே என் வேலைக்குச் சம்பளத்தை இரண்டு மடங்காய் உயர்த்திட்டாங்களே...!"

— திருத்துறைப்பூண்டி எஸ். கந்தசாமி.

பித்து விடும்'' என்றார் ஃபாதர். அதற்காகச் சிறுவர்களைத் தயார்ப்படுத்தும் உத்தேசமும் உள்ளதாம்! ஃபாதர் மேலும் கூறினார்:

''வசதிபடைத்த பள்ளிச் சிறுவர்கள் மனத்தில் மனிதாபிமான உணர்வை ஏற்படுத்த வேண்டும். தங்கள் பெற்றோர்கள், வீட்டில் வேலை செய்யும் சிறுவர்களை மோசமாக நடத்தினால் அதற்காக இவர்கள் வாதாடவும் போராடவும் துணிந்து முன்வர வேண்டும்.

''தொண்டு நிறுவனங்களும் பொதுநல நிறுவனங்களும் ஒன்று சேர்ந்து, உழைக்கும் சிறுவர்களுக்காகப் பாடுபட வேண்டும். ஒவ்வொரு ஊரிலும் உழைக்கும் சிறுவர்களின் பெயர்கள் பதிவு செய்யப்பட்டு, அவர்களுக்கு அநீதியோ, கொடுமையோ இழைக்கப்பட்டால் இந்நிறுவனங்களின் பார்வைக்கு வர வேண்டும். எந்த முதலாளியும் இவர்களது அனுமதியில்லாமல் சிறுவர்களை வேலையிலிருந்து நீக்க முடியாமல் செய்ய வேண்டும். ஆனால் சுய்முயற்சி நிறுவனங்கள் ஆக்கபூர்வமான காரியங்கள் செய்ய வேண்டுமானால் சட்டத்தின் பாதுகாப்பு அவற்றுக்கு வேண்டும்.

''குழந்தைகளை இயந்திரங்களாக்கிப் பணம் பண்ணுபவர்களுக்கு இந்தத் திட்டங்கள் பிடிக்காதுதான். ஆனால் அத்தகையவரின் எதிர்ப்பால் சோர்ந்து போய், சமூகத்தின் அங்கமாகிவிட்ட ஓர் அநீதியைப் பார்த்துக் கொண்டு சும்மா இருப்பது பாவம். எல்லாரும் மனசு வைத்தால் சாதிக்க முடியாதது எதுவுமில்லை. உழைக்கும் சிறுவர்கள் கேட்பது பிச்சையில்லை. அவர்களுக்கு வேண்டியது அன்பும் மனிதாபிமானமுமாகும். அதை நாம் கொடுக்கத் தவறினால் நாமெல்லாம் கொலை பாதகர்கள்...'' என்றார் ஃபாதர் ஜோ அரிம்பூர்.

சிறு வயது முதல் உழைத்துச் சாப்பிடும் பழக்கம் ஏற்படுவது நல்லதுதான். ஆனால் அந்த உழைப்பு கல்வியோடு இணைந்து சிறுவர்களுக்குச் சந்தோஷமும் தன்மானமும் தேடித் தருவதாக அமைய வேண்டுமே தவிர, அடிமைத்தனத்தை வளர்ப்பதாகவா இருப்பது?

— வாஸந்தி

மேலட்டை வண்ணப்படம், புகைப்படங்கள்:
கே. வி. ஆனந்த்

டில்லி தபால்:

# மேனகாவுக்கு அனுப்பப்படும் சிக்னல்கள்!



* அழுக்கமாக....

## போன மச்சான் திரும்பி வந்தான்...

அராபிய நாடுகளுக்கு இந்தியர்கள் வேலை தேடி ஓடிக் கொண்டிருந்த நிலைக்கு இனி மங்களம் பாட வேண்டியதுதான். அந்நாடுகளில் இந்தியர் பலர் வேலை நீக்கம் செய்யப்பட்டு மூட்டை முடிச்சோடு தாய் நாட்டுக்குத் திருப்பி அனுப்பப்படுகிறார்கள். காரணம், இந்தியா — பாகிஸ்தானுடன் போட்டி போட்டுக் கொண்டு இப்போது மலேசியா, தாய்லாந்து, சிங்கப்பூர் முதலிய நாட்டு மக்களும் குறைந்த கூலிக்கு வேலை செய்ய அராபிய நாடுகளுக்குப் போக ஆரம்பித்து விட்டனர். மற்றொன்று, இங்கிருந்து போகும் இந்தியர்கள் பலர் பொய்யான பாஸ்போர்ட், வேலை நியமன உத்தரவு முதலியவற்றுடன் போகிறார்கள். இந்த மோசடிக்காரர்களால் நம் நாட்டுக்கே தலை குனிவு என்பது ஒருபுறமிருக்க அங்கு போகும் எல்லா இந்தியர்களையுமே சந்தேகக் கண் கொண்டு பார்க்கச் செய்து விடுகின்றனர்.

வேலை வாய்ப்புக்கள் குறைய இன்னொரு காரணம் அராபிய நாடுகள் கம்ப்யூட்டர்கள், தானியங்கு இயந்திரங்கள் முதலியவற்றில் முதலீடு செய்ய ஆரம்பித்து விட்டன. பெட்ரோலிய எண்ணெய் வளம் இன்னும் 30—40 ஆண்டுகள்தான் நீடிக்கும் என்பது அவர்களுக்குத் தெரியும். அதன் பின் இன்று போல் அவர்களால் தாராளச் செலவு செய்ய முடியாது. அதனால் சம்பளம் தர வேண்டிய வேலை வாய்ப்புக்களைக் குறைத்து அனைத்தையும் தானியங்கு இயந்திரமாக்கி வருகின்றனர்.

## சாதனைச் சரித்திரம் சாகிறது

பழைய ரயில் இஞ்ஜின்களை மேல்நாடுகளில் புராதனப் பொருள்கள் என்ற வகையில் துடைத்து வைத்துப் பாதுகாக்கிறார்கள். நமது நாட்டிலோ டீசல் இன்ஜின்கள் வந்த பிறகு பழைய நீராவி இன்ஜின்கள் திறந்த வெளியில் கிடந்து துரு ஏறிப் பாழடைய விடப்படுகின்றன. ஏராள இன்ஜின்களின் மறைகள் கழற்றப்பட்டுப் பகுதி பகுதியாகப் பிரித்து எடைக்குப் போடப்படுகின்றன.

நமது தேசத்தில் 1880லேயே நீராவி இஞ்ஜின் வந்துவிட்டது. அந்த இஞ்ஜின்களுக்கெல்லாம் மகத்தான சாதனைச் சரித்திரம் இருக்கிறது. அவற்றை ரயில்வே கண்காட்சியாக அமைத்துப் பாதுகாத்து அவற்றின் சரித்திரத்தையும் இளைஞர்களுக்கு இன்றும் நாளையும் விளக்கி வர வேண்டும். புது தில்லியில் உள்ள ரயில் கண்காட்சியில் பல சுதேசி சமஸ்தான ராஜாக்களின் சொகுசு ரயில் பெட்டிகள் பார்வைக்கு வைக்கப்பட்டுள்ளன. ஆனால் புராதன நீராவி இஞ்ஜின்களுக்குப் பாதுகாப்பே இல்லை.

## அழுக்கமாக மேனகா

பழசையெல்லாம் மறந்து ராஜீவ் காந்தியு



* இந்தியாவின் முதல் ரயில் இஞ்ஜின் — 'ஃபேரி க்வின்'

டன் சிநேகமாக இருக்க வேண்டும் என்று மேனகாவுக்கு சிக்னல் அனுப்பப்பட்டிருக்கிறது. சஞ்சய் காந்தியின் தளபதிகளும் தொண்டர்களும் பலர் இன்று இ. காங்கிரஸில் சேர்ந்து இளைஞர் காங்கிரஸில் முக்கிய பதவி வகிக்கின்றனர். இவர்களில் சிலர் தான் மேனகா காந்தியையும் வளைத்துப் போட முயல்கின்றனர். ஆனால் மேனகா இதுவரை பிடிகொடுத்துப் பேசவில்லை.

இப்போது அளவில் மிகவும் சிறுத்துப் போய் விட்டது மேனகாவின் 'சஞ்சய் விசார் மஞ்ச்' என்ற அமைப்பு. எனவே இதனை மேனகா கலைப்பாரா? இ. காங்கிரஸுடன் இணைப்பாரா? தனித்தன்மையுடன் இயங்க மேலும் பலப்படுத்துவாரா? அல்லது ஒருவேளை எதிர்க் கட்சிகளுள் ஒன்றுடன் இணைத்து விடுவாரா? இதைப் பற்றிப் பலரும் பலவிதமாகப் பேச மேனகா மட்டும் அமுக்கமாக இருக்கிறார்!

## கமிட்டி அறிக்கை மீது சிலந்தி வலை

நேபாளத்துக்குப் போய் வர அது வேறு தேசமான போதிலும் விசா தேவையில்லை. அண்மையில் நேபாள அரசினால் அமைக்கப்பட்ட குருங் கமிட்டி, இது நல்லதல்ல என்றும் விசா முறை அமுல்படுத்தப்பட வேண்டும் என்றும் கூறியுள்ளது. ஆனால் போக்குவரத்துக் கட்டுப்பாடுகள் இல்லாதிருப்பதால் நேபாளிகளே அதிகப் பலன் அடைகின்றனர். அவர்கள் நூற்றுக் கணக்கில் அவ்வப்போது வேலை வாய்ப்புத் தேடி இந்தியா வருகின்றனர். மேலும் இந்தியர்கள் ஆண்டுதோறும் ஆயிரக்கணக்கில் நேபாளத்துக்கு டூரிஸ்டுகளாகப் போய்ச் செலவு செய்கிறார்கள். ஆக இரு விதத்திலும் நேபாளிகளுக்கே நன்மை. குருங் கமிட்டி சிபாரிசுகள் மீது சிலந்தி வலை பின்னும் என்றே கருதப்படுகிறது.

— ரவீந்தர் குமார்

# வெட்கப்படும் அ. தி. மு. க. தொண்டர்!



புரட்சித் தலைவர் புரட்சித்தலைவி
அன்புத் தொண்டர்களுக்கு
ஓர் வேண்டுகோள்
M.K. கணேசன்

"புரட்சித் தலைவரால் பதவி சுகம் அனுபவித்த அனைவருக்கும், 'உண்மையான அ.தி.மு.க. தொண்டன்' என்று கூறிக்கொள்வோருக்கும் எனது அன்பான வேண்டுகோள்:

'எந்தச் சந்தர்ப்பத்திலும் மிகவும் நாகரிகமாகப் பேச வேண்டும்' என்று உங்களை மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன்.

இப்படிக்கு, 'நான் அ. இ. அ. தி. மு. க. வைச் சேர்ந்தவன்' என்று சொல்ல வெட்கப்படும்,

எம். கே. கணேசன்,
எட்டாவது வட்டம், புதுக்கோட்டை."

முன்னாள் அமைச்சர்களின் கீழ்த்தரமான மேடைப் பேச்சுக்களைக் கேட்கச் சகிக்காத நிலையில் மேற்கண்டவாறு நோட்டீஸ் அடித்து விளம்பரப் படுத்தியிருக்கிறார் எம். கே. கணேசன்.

ஏழையின் சொல் அம்பலம் ஏறுமா?

## நூல் நிலையங்களில் இருக்க வேண்டிய அற்புதமான நாவல்கள்
## வாசகர்களின் மனம் கவர்ந்த புகழ் பெற்ற நாவல்கள்!

### அனுராதாரமணன்

| | |
|---|---|
| கனவு மறந்த கண்கள் | ரூ 20 |
| நெருப்பாக நீ | 20 |
| தொடச் சொல்லும் தொடுவானம் | 16 |
| பெண்மையே பேசவா | 18 |
| நமக்குள் இருக்குது ரகசியம் | 10 |
| உறவுகள் புரியும் போது | 9 |
| விளக்கை வெறுக்கும் விட்டில்கள் | 16 |
| முதல் காதல் | 12 |
| ஆசைக்கிளியே அழகிய ராணி | 12 |
| இந்த இதழில் ஆரம்பமாகிறது | 12-50 |
| ராத்திரி வந்த மான் | 22 |
| ஆகாயம் மண்ணில் வரும் | 10 |
| இனியும் என்னைத் தொடராதே | 18 |
| உன்னருகே உள்ளவன் | 17-50 |
| முந்தானைச் சிறை | 22 |
| சகாராவில் பூத்த ரோஜா | 20 |
| காலம் வரும் சந்திப்போம் | 17 |
| மன்னிக்க வேண்டும் மன்னவனே | 16 |
| நீயும் நானும் ஒரு வீடும் | 15 |
| காலம் உன் கையில் | 17 |

### ராஜேந்திர குமார்

| | |
|---|---|
| ஒரு ஆரம்பம் பல முடிவுகள் | 15 |
| தாயும் ஆனவள் | 14 |
| கெஞ்சும் சலங்கை | 14 |
| மறுபடியும் மரணம் | 10 |
| மின்னல், இடி, பூகம்பம் | 12-50 |
| நிழலாக ஒருத்தி | 10 |
| ரயிலில் வந்த மயில் | 12 |
| கோடையில் பனி மழை | 18 |
| மகளிர் மட்டும் | 11 |
| ஊமைக் கரு | 10 |
| பாதி மனிதன் | 12-50 |
| ஒரு இரவு நேர ஒத்திகை | 15-50 |

### பட்டுக்கோட்டை பிரபாகர்

| | |
|---|---|
| துப்பாக்கி விடு தூது | 10 |
| மன்னிக்கவும் வேறு வழியில்லை | 8 |
| நிற்காதே கவனிக்காதே | 15 |

### ஜோதிடக்கலைக்கோ A.M. பிள்ளை

| | |
|---|---|
| ஜோதிடக்களஞ்சியம் 7 பாகங்கள் | 98 |

### ரமணி சந்திரன்

| | |
|---|---|
| என் கண்ணில்பாவையன்றோ | ரூ 16 |
| மெல்லத் திறந்தது கதவு | 10 |
| மானே, மானே, மானே | 15 |
| மயங்குகிறாள் ஒரு மாது | 20 |
| காதலெனும் சோலையிலே | 20 |
| வெண்மையில் எத்தனை நிறங்கள் | 22 |
| ஒரு கல்யாணத்தின் கதை | 10 |
| மதுமதி | 10 |
| நினைப்பதெல்லாம் நடந்துவிட்டால் | 9 |
| தொடுகோடுகள் | 12 |
| விடியலைத் தேடும் பூபாளம் | 15 |
| கண்ணே கண்மணியே | 15 |
| ஒரு மலர் | 15 |
| நாதகர ஓசையிலே | 10 |
| லாவண்யா | 12 |
| அவனும் அவளும் | 12 |

### ராஜேஷ்குமார்

| | |
|---|---|
| ஒரு தப்புத் தாளம், ஒரு சரியான ராகம் | 20 |
| மாண்டவன் கட்டளை | 16 |
| அருண், ஆஷா | 18 |
| ஒரு ஆகஸ்ட் மாத ஆகாயம் | 17 |
| இந்து இனி இல்லை | 15 |
| எங்கிருந்தோ ஆசைகள் | 20 |
| கோகிலாவும் ஒரு கோடைக்காலமும் | 15 |
| உயிரெடுக்கும் உதடுகள் | 15 |
| இருள் பொருள் இன்பம் | 15 |
| நான்தேடும் ரோஜாப்பூ | 17-50 |
| மற்றவை நள்ளிரவு 1-05 க்கு | 17 |
| ஒரு ஜனவரியின் ஞாயிற்றுக்கிழமை | 12 |
| கனவுகள் இங்கே | 15 |
| கனவின் விலை பத்து லட்சம் | 11 |
| ஒரு விடியற்காலை விபரீதம் | 11 |
| எங்கும் ஹேமா, எதிலும் ஹேமா | 12 |
| கண்ணுக்குத் தெரியாத ஒருவலை | 12 |
| மழை பெய்த இரவில் | 20 |
| தப்புத் தாரிணி தப்பு | 20 |
| விபரீத விநாடிகள் | 20 |

### புகழ் பெற்ற 'சுபா' நாவல்கள்

| | |
|---|---|
| சின்னச் சின்ன கனவுகள் | 17 |
| நிலவே நீயும் விலகாதே | 14 |
| மேலே சில கழுகுகள் | 20 |
| சிகப்பாய் சில மேகங்கள் | 18 |
| மறக்காதே மன்னிக்காதே | 14 |
| மயானப் பிரசவங்கள் | 14 |

இன்னும் ஏராளமான நாவல்கள் தேவையான புத்தக விலையுடன் பதிவுத் தபால் செலவுக்கு ரூ 6 சேர்த்து M.O. அனுப்பவும்.

# அருணோதயம்

3, கௌடியாமடம் சாலை
இராயப்பேட்டை, சென்னை 600 014.
போன்: 867553.

## வட்டமேஜை

• கல்கி 14.2.88 இதழ் தலையங்கத்தில், அ.இ.அ.தி.மு.க. வின் இருதரப்பிலும் யோக்கியமான தலைவரே யாருமில்லை என்பதைக் குறிப்பிட்டு, ஒரு கூடை செங்கலும் பிடாரி என்ற வழக்கை உவமை கூறியிருந்தீர்கள். இவ் வழக்குக்கு ஒரு சுவாரசியமான பின்னணி உண்டு. செங்கற்களால் பீடம் அமைத்து அதில் நடுநாயகமாக ஒரு செங்கல்லையே பிடாரி(தெய்வம்)யாகப் பிரதிஷ்டை செய்து வழிபடுவது என்பது வழக்கம். அம்மாதிரி ஒரு ''பிடாரி''யை பிரதிஷ்டை செய்து வழிபட நினைத்த கிராமத்தார், ஒரு கூடையில் செங்கற்கள் கொணர்ந்தனர். பீடம் அமைக்கக் கல்லை எடுத்தால் 'நான்தான் பிடாரியாக இருப்பேன்' என்று எல்லா செங்கற்களும் அடம்பிடித்தனவாம் அதை நினைவு கொள்ள எழுந்ததே மேற்படி வழக்கு!

தங்கள் தலையங்கத்தில் கட்டிக் காட்டிய இந்த வழக்கு மக்கள் பிரதிநிதிகளுக்குப் பொருத்தமானதுதான். ஆனால் சட்டசபை நிகழ்ச்சிகளின் பின்னணியில் இதை உவமையாகச் சுட்டிக் காட்டியதுதான் சற்று இடிக்கிறது.

நெய்வேலி. கரபி.

• 'தமிழகம் தேய்கிறது; ஓட்டை விழுகிறது' கட்டுரை புள்ளி விவரங்களுடன் ஆதாரபூர்வமாக எழுதப்பட்டிருந்தது. தொழில் முன்னேற்றத்தில் இந்தியாவிலேயே மூன்றாவது இடத்தை வகித்த தமிழகத்தின் இன்றைய நிலையைப் பார்க்கும் போது வயிற்றெரிச்சலாக உள்ளது. வரப்போகும் தேர்தலிலாவது மக்கள் சிந்தித்து வாக்களிக்காவிட்டால் தமிழ் நாட்டை ஆண்டவனும் காப்பாற்ற முடியாது.

கும்பகோணம். குடந்தை கே. பட்டு.

# பிடாரி பதவிக்குப் போட்டி!

• ''பாதிப்பு'' சிறுகதை பத்திரிகைகளுக்கு அனுப்பப்படும் 'படைப்புகள்' எந்த அளவுக்கு ஆசிரியர் குழுவினரால் பரிசீலிக்கப்படுகின்றன என்பதைச் சுவாரஸ்யமாக உணர்த்தியது.

பம்பாய் — 69. ஏ. கணேசன்.

• 'வன்முறை ஒரு ராட்சஸன். அது எஜமானரையே அழித்துவிடும்!' என்பதை உணர்த்தும் அந்த பிரெஞ்சுப் படத்தைத் தமிழாக்கம் செய்து, நமது இந்தியாவில், குறிப்பாகத் தமிழ் நாட்டில் மூலை முடுக்குகளிலெல்லாம் திரையிட வேண்டும்! இங்குதான் வன்முறை வாரம் ஒரு முறை நடக்கிறதே!

செம்பொன்னார்கோவில். எஸ். வி. ஏ. பிரகாஷ்.

• சத்யா ஸ்ரீனிவாசனின் ''சுயமரியாதை'' சிறுகதை, சிந்தனையைத் தட்டி விட்டது.

மேட்டுப்பாளையம் — 1. மா. கணேசன்.

• முதலில் வெங்சர்க்காருக்கு வீரம் இல்லையே என்று நினைத்திருந்தேன். தங்கள் தலையங்கம் படித்த பின்னர்தான் வெங்சர்க்கார் நடத்திக் காட்டிய காந்திய நெறிமுறை எனக்குப் புரிந்தது. கோபத்தினால் வீரம் காட்டுபவன் வீரனல்ல; கோழைதான். கோபத்தை அடக்குபவனே வீரன் என்பதும் காந்திஜி சொன்னதுதானே!

சென்னை — 14. ஜே. பி. பொன் பிரபாகர்.

• பம்பாயில் பதற்ற நிலை... கட்டுரையைப் படித்து மனம் கசந்தேன். சே..! நாடு, இப்போதிருக்கின்ற சூழ்நிலையை நினைத்துப் பார்க்காமல் கோஷ்டித் தகராறுகள் தானா எங்கும்? ஒவ்வொரு மாநிலத்திலும் இம்மாதிரி பூசல்கள் நிகழ்வதனாலேயே நாடு முன்னேற்றம் அடையாமல் போகிறது.

சென்னை — 33. எஸ். ராம்கோபால்.

• ஆர்வத்தோடு செயல்படுகிறார்கள் அதிகாரிகள் என்ற கட்டுரைப் பகுதி கல்கி மீது உள்ள மதிப்பை மேன்மேலும் உயர்த்தக் கூடிய வகையில் அமைந்துள்ளது. கலெக்டர் மாலதிக்குப் பாராட்டுக்கள்.

சிதம்பரம் — 1. கே. குருமுருகு.

• 'அட்டைப் படத்தைப் போலவே உங்கள் நிருபர் கேட்ட கேள்விகளுக்குக் 'கலைஞர்' அளித்த பதில்களும் 'பளிச்'சென்றிருந்தன!'

மயிலாடுதுறை. வி. எழில்.

• கலைஞரின் சிறப்புப் பேட்டி படித்தேன். கல்கி கேட்ட அனைத்து கேள்விகளுக்கும் கலைஞர் பதில்களை நயம்படக் கூறியிருந்தார். மிகவும் ஆழமான கருத்துக்களைத் தெளிவாக, சுருக்கமாக யாரும் அறிந்து கொள்ளும்படி எடுத்துச் சொன்னது நன்று.

இளையான்குடி. கே. எம். ரபியுல்லாகான்.

• கலைஞரின் பேட்டி சிறப்பாக இருந்தது. உங்கள் சிறந்த கேள்விகளுக்கு — எந்த கட்சியின் மீதோ, தனிநபர் மீதோ — அபாண்டமாக — வெளிப்படையாகக் குறை கூறிச் சாடாமல், நாகரீகமான முறையில், நாசூக்காக அவர் பதிலளித்த விதம் ரசிக்கும்படியாக இருந்தது.

மேலக்காவேரி — 2. ஏ. ஹரி.

• தி.மு.க. தலைவர் கலைஞருடைய பேட்டி அருமை. தமது கட்சி ஒரு ஜனநாயக இயக்கம், எந்த ஒரு பிரச்னையும் பொதுக் குழு உறுப்பினர்கள் ஏகோபித்த முடிவிற்குப் பின்தான் முடிவு செய்யப்படும் எனக் கூறுகின்ற அவர், கட்சி உறுப்பினர்களை எவ்வாறு மதிக்கிறார் என்பதைத் தெளிவுபடுத்தி விட்டார். சாதி வாரியான இட ஒதுக்கீடு பற்றிய பதிலில், கலைஞர் தாம் ஒரு மிகச் சிறந்த அரசியல்வாதி என்பதைச் சொல்லாமல் சொல்லி விட்டார்!

சின்னமனூர். பா. புஷ்பாமுருகேசராஜன்.

• கலைஞர் மு. கருணாநிதியின் பேட்டியைப் பிரசுரிக்க முடிந்ததில் கல்கி மகிழ்ச்சி அடைகிறது என்றாலும் இலங்கைப் பிரச்னை, ஆளுனர் குரானாவின் செயல்பாடு ஆகிய இரு அம்சங்களில் மட்டும் கல்கி பத்திரிகைக்கு எந்த வகையில் மாறுபட்ட கருத்து உண்டு என்பது வாசகர்கள் நன்கு அறிந்ததே.

— ஆசிரியர்.



**ப**ங்களாதேஷ் நாடாளுமன்றத்துக்குத் தேர்தல் நடத்தப்படும் என்று என்றைக்கு அதிபர் எர்ஷாட் அறிவித்தாரோ, அன்றைக்கே தொடங்கிவிட்டது வன்முறைக் கிளர்ச்சி. கொந்தளிக்கிறது பங்களாதேஷ்!

பிப்ரவரி முதல் வாரத்தில் நடந்த பஞ்சாயத்துத் தேர்தல் களங்கள், பல இடங்களில் போர்க்களங்களாகத்தான் இருந்தன. நாட்டு வெடிகுண்டுகளும், துப்பாக்கிகளும் அடிதடி ரகளையில் தாராளமாக உபயோகிக்கப்பட்


எர்ஷாட்

# கொந்தளிக்கிறது, பங்களாதேஷ்!

டன. சுமார் இருநூறு பேர் இறந்து போனார்கள். ஆயிரக்கணக்கானவருக்கு அடி. இங்கே பல வேட்பாளர்கள் டெபாஸிட் போய்த்தானே பார்த்திருக்கிறோம்? டாக்காவில் பல வேட்பாளர்களுக்குத் தலையே போய் விட்டது! தேர்தல் அதிகாரிகளை மட்டுமல்ல, ஓட்டுப் பெட்டிகளையும் கூடவே கடத்திக் கொண்டு ஓடிவிட்டார்கள் எதிர்ப்பாளர்கள். நூற்றுக்கணக்கான வாக்குச் சாவடிகளில் ஓட்டுப் போடவே முடியாத நிலை. அத்தனை எதிர்ப்பு எர்ஷாட் தலைமைக்கு!

இந்த லட்சணத்தில், மார்ச் மூன்றும் தேதி, முந்நூறு இடங்களைக் கொண்ட நாடாளுமன்றத் தேர்தல்களை நடத்தியே தீருவோம் என்கிறார் எர்ஷாட். டாக்கா, சிட்டகாங், குல்நா, ராஜ்ஷாஹி, ஆகிய நான்கு நகர சபைத் தேர்தல்களும் அன்றேதான். ஆனால் பிரதான எதிர்க்கட்சிகள் பங்கு கொள்ளாத தேர்தல் என்ன தேர்தல்? எதிர்க்கட்சிகள் என்றால் ஒன்றிரண்டு அல்ல. கிட்டத்தட்டப் பதினைந்து! இதில் அவாமி லீக் கட்சியின் தலைவி ஷேக் ஹஸீனா (முஜிபுர் ரஹ்மானின் பெண்)வும், பேகம் கலீதா ஜியாவும் (பங்களாதேஷ் நேஷனல் கட்சித் தலைவி) முக்கியமான எதிர்க்கட்சித் தலைவிகள். கூடவே இவர்களது புடைவைத் தலைப்பைப் பிடித்துக் கொண்டு சில இடதுசாரிக் கட்சிகளும் இருக்கின்றன.

சென்ற மே '86 ல் நடந்த பொதுத் தேர்தலின் லட்சணமும் இப்படித்தான் இருந்தது.



பதினெட்டே மாதங்களில் நாடாளுமன்றம் கலைக்கப்பட்டு, நவம்பர் '87 ல் எமர்ஜென்ஸி கொண்டு வரப்பட்டது. பல எதிர்க்கட்சித் தலைவர்களைக் கம்பி எண்ண அனுப்பிவிட்டது எர்ஷாட் தலைமையிலான ஜாதியக் கட்சி.

பேகம் கலீதா ஜியாவும், ஷேக் ஹஸீனாவும் என்னதான் கேட்கிறார்கள்? சுருக்கமாகக் கூறுவதெனில், ராணுவ அதிகாரியான எர்ஷாட் ஆட்சி நடத்தக் கூடாது. இப்படி மாய்மாலத் தேர்தல் நடத்தி, தாமே மறுபடியும் ஆட்சிக்கு வரக்கூடாது.

சரி, எதிர்க்கட்சிகளுக்கு ஆதரவு இருக்கிறதா மக்களிடத்தில்? தாராளமாக இருக்கிறது. மாணவர்கள், வழக்கறிஞர்கள், பத்திரிகையாளர்கள், கலைஞர்கள் — அத்தனை பேரும் எதிர்க்கட்சிகளுக்கு ஆதரவு தெரிவித்திருக்கின்றனர். அத்தனை வெறுப்படைந்து போயிருக்கிறார்கள் எர்ஷாட் ஆட்சியில்.

விடுவாரா எர்ஷாட்? 'எதிர்க்கட்சிகளுக்கு அடிபணிவதாவது! பார்த்து விடுகிறேன் ஒரு கை!' என்று சவால் விட்டிருக்கிறார். மூத்த அமைச்சர்கள் இரண்டு பேர் ராஜினாமா செய்துவிட்டார்கள். ஆளுங்கட்சி வேட்பாளர்கள் எங்கே தலை காட்டினாலும் கேலியும், கூச்சலும் மக்களிடமிருந்து பீறிட்டுக் கொண்டு கிளம்புகின்றன.

எர்ஷாடுக்கு எதிரான இந்த யுத்தத்தில் முக்கிய பொறுப்பு வகிக்கும் ஷேக் ஹஸீனாவும், பேகம் கலீதா ஜியாவும் ஜிவ்வென்று அரசியல் வானில் உச்சாணிக்குப் போய் விட்டார்கள். ஆனால் இருவரும் ஒன்றாக இணைந்து போராடுவார்களா? பாரபட்சமற்ற தேர்தல்கள் நடந்து பங்களாதேஷில் ஜனநாயகம் பிழைத்து எழுமா?

— சித்தார்த்

மாதவறாவ் சிந்தியா
ரயில் கட்டண உயர்வு
ரூ 622 கோடி

தர்மாவிடம் குட்டு
சட்டசபையில் குட்டு!
பாண்டியன்
சட்ட மன்ற மரபு பற்றி எனக்கு உபதேசம் பண்ணிட்டு ராஜ்ய சபையில் செமத்தியா வாங்கி கட்டிக் கிட்டீரே!

மூப்பனார்
ஜெயலலிதா

தொகுதி உடன்பாடு பற்றி காங்கிரஸ், அ.தி.மு.க.(ஜ) கட்சிகளிடையே சர்ச்சை தொடர்கிறது!



# கல்கி

1988 மார்ச் 6
மலர்: 46 இதழ் 32
பிரபவ மாசி 23



## புறப்படுங்கள் பாதயாத்திரை!

தபால் கார்டில் எழுதுங்க, ஸார்! நம்மைப் போன்ற சாமானியருக்காகவே கருணை கூர்ந்து அரசு தபால் கார்டு விலையை ஏற்றாமல் இருப்பது தெரியாதா உங்களுக்கு? நிறைய எழுத வேண்டுமா? அப்படியானால் தொடரும் போட்டு இன்னொரு தபால் கார்டில் எழுதுங்களேன். இன்லாண்டில் எழுதுவதைவிட அது மலிவு! என்னது...? காதலிக்கு எழுதணுமா? வேறு யாரும் படிக்கக் கூடாத ரகசியமா? சரியாப் போச்சு! அப்படியானால் வாரம் ஒரு கடிதம் எழுதி வந்த நீங்கள் இனி இரண்டு வாரங்களுக்கு ஒரு கடிதம் எழுதுங்களேன். இடைவெளி அதிகரிக்க ஆவல் பெருகும்! காதல் பொங்கும்! சந்தேகமிருந்தால் பண்டைக் காலக் கவிஞர்களைக் கேளுங்கள். பிரதமர் ராஜீவைக் கேட்டுத் தொலைக்காதீர்கள்! ஏனென்றால் அவர் சொந்தச் செலவில் கடிதம் எழுதுவதில்லை. ராஜாங்கச் செலவில்தான் எழுதுவார். தபால் டெலிஃபோன் கட்டண உயர்வால் ராஜாங்கச் செலவினங்கள் அதிகரிக்கும் போது அதையெல்லாம் தாங்கப்போவது நீங்களும் நானும்தான். ராஜீவ் அல்ல. அதனால் அவரைப் போய்க் கேட்டுச் சிரமப்படுத்துவானேன்?

அவசர காரியமாக யாருக்காவது எஸ். டி. டி. போட்டுப் பேச வேண்டுமா? நள்ளிரவு வரை காத்திருங்கள். அப்போது கட்டணச் சலுகை உண்டு! அந்த ஆசாமியைத் தூக்கத்தில் எழுப்பி அவர் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்வதோடு கொட்டாவி விட்டபடியே அவர் பேசுவதால் தகவல்களைத் தப்பும் தவறுமாகப் புரிந்து கொண்டாலோ அல்லது மறந்தாலோ உங்களுக்குப் பெருநஷ்டமேற்படலாம். அதனால் என்ன? நள்ளிரவுச் சலுகைக் கட்டணத்தால் கிடைத்த சிறிதளவு லாபத்தை எண்ணிச் சந்தோஷப்படுங்களேன்!

ரயில் கட்டணங்கள் எக்கச்சக்கமாக உயர்ந்து விட்டனவே என்று தலையில் கையை வைத்துக் கொண்டு உட்காராதீர்கள். உங்களுக்குப் பாரத நாட்டைச் சுற்றிப் பார்க்க வேண்டுமா? பாதயாத்திரை புறப்படுங்கள்! ஜனதா தலைவர் சந்திரசேகர் போக வில்லையா? வினோபா நடக்கவில்லையா? உங்களுக்கு மட்டும் என்ன வந்தது? என்னது...? எல். டி. ஸியா? அது சரி, எல். டி. ஸிக்களுக்கும் எம். பி., எம். எல். ஏக்களுக்கும் அரசு அதிகாரிகளுக்கும் கவலையில்லைதான். ஆனால் இவர்களுக்கெல்லாம் ஆகப் போகும் அதிகச் செலவைக் கடைசியில் தாங்கப் போவது இதோ பாத யாத்திரையாகப் புறப்பட்டிருக்கிறானே, இந்தச் சாமானியன்தான்!

ரயில்வே சரக்குக் கட்டண உயர்வால் விலைவாசி உயராதாம்! மந்திரியே சொல்லி விட்டார்! அமைச்சர் சொன்னபடி கேட்டு விலைவாசி நடந்து கொள்ள வேண்டும்தானே? ஆனால், இந்த அசட்டு விலைவாசி, யார், எவ்வளவு எடுத்துச் சொன்னாலும் கேட்பதில்லை. உயர்ந்து கொண்டே போகிறது. ஆனால், அதுகுறித்து அமைச்சரைக் கோபித்துப் பயனில்லை. கோடிக்கணக்கில் செலவு செய்து கல்யாணம் நடத்திக் காட்டிய அவருக்கு இந்த விலைவாசி உயர்வு ஒரு சின்ன கொசுக்கடியாகக் கூட இருக்கப் போவதில்லை. உங்களையும் என்னையும்தான் வாட்டும்! நன்றாக வதைக்கட்டும்! அனுபவிக்கத்தானே பிறந்திருக்கிறோம்!

பெண்டாட்டி ஊருக்குப் போகிறாளா? வீட்டிலிருந்தபடியே வழியனுப்புங்கள். ஸ்டேஷனுக்குப் போக வேண்டாம். பிளாட்ஃபாரம் டிக்கெட் ஐம்பது சதம் உயர்ந்திருக்கிறது. இனி பிளாட்பாரங்களை ஆக்கிரமிக்கிறவர்கள் ரயிலில் போகும் அரசியல் தலைவர்களுக்கு 'ஜே' போடும் டிக்கெட் எடுக்காத கும்பல்களாக மட்டுமே இருக்க வேண்டும்.

ஆபீஸ் போக ஸீஸன் டிக்கெட் கட்டணம் உயர்ந்துவிட்டது என்று புலம்புகிறீர்களே, நியாயமா? எட்டு தலைமுறைகளுக்குப் பிறகு இருபத்தோராம் நூற்றாண்டின் இறுதியில் சென்னையில் துரித ரயில் திட்டம் நிறைவேறும்போது, இப்போது நீங்கள் செய்கிற தியாகத்தின் பலனை நிச்சயம் உணர்வீர்கள்!

ஊரில் உறவினர் கல்யாணமா? குடும்பத்தோடு போய் நிற்காவிட்டால் என்ன? பரிசுத் தொகையை மணி ஆர்டர் பண்ணிவிடுங்களேன், போதும். பயணச் செலவு மிச்சம். என்ன, மணி ஆர்டர் சார்ஜும் ஏறிவிட்டதா? என்ன ஸார், இதற்கெல்லாம் பயப்படலாமா? இதற்கே இப்படிப் பயந்தால் திங்கட்கிழமை வெளிவரப் போகும் பொது பட்ஜெட்டை எப்படித் தாங்கப் போகிறீர்கள்?

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.



# ஊரை தெரிஞ்சிகிட்டேன்

குருவைத்தொடர்ந்துகுருவின்பாணியிலேயே சிஷ்யன் பாண்டியராஜனும் பிரசித்தி பெற்ற ஐ. எஸ். ஐ. முத்திரை போடப்பட்ட அந்த அகலமான திருட்டு விழியுடன் ஆஜர். தியேட்டரில் சிரிப்பும் ஆஜர்.

கதைக்கும் பல சிரிப்புச் சம்பவங்களுக்கும் சம்பந்தம் ஒரு கடுகு அளவு கூட இல்லை என்றாலும், சின்னக் குழந்தைகளில் இருந்து பெரிய குழந்தைகள் வரை சிரிசிரியெனச் சிரிக்க வைக்கிறார்களே. அதற்காகப் பாராட்டலாம்.

பொறுப்பில்லாத தகப்பன் விட்டுப் போன பின்பு, பொறுப்பான ஓர் அண்ணன், தங்கைக்கு மாப்பிள்ளை தேடி, கல்யாணம் பண்ணி வைக்கும் கதை. கிளைக் கதைகளும் உண்டு.

படத்திற்கு வில்லன் வேண்டுமில்லையா? மலேசியா வாசுதேவன் அண்ட் கோ — சம்பந்தம் பேச வேண்டியது. வரதட்சணை. வைர மோதிரம் என்று பேசித் தாலியையும் கட்ட வைத்துவிட்டுக் கழன்று கொள்வது. அரதல் பழசு. ஜெயிலில் ஒரு ஸ்டண்ட் ஸீன் வைக்க வேண்டுமென்பதற்காகவே இந்தக் கோஷ்டியைக் கதையில் நைஸாக நுழைத்து விட்ட மாதிரி இருக்கிறது.

நாயகி, பல்லவி, த்சொ! படத்திற்கு ஊறுகாயாகக் கூட இல்லை. உப், சப் இல்லாத வெண்டைக்காய்க் கறி.

ஜெய்சங்கர், த்சொ! த்சொ!

செந்தில் யாருடனாவது கூட்டுச் சேர்ந்தால் அபாரமாகப் பரிமளிக்கிறார். அன்று கவுண்டமணி. இன்று பாண்டியராஜன்.

பாட்டுகளில் 'உனைத் தாலாட்டுவேன்' பரவாயில்லை.

படம் நெடுக நகைச்சுவையைத் தூவி விட்டார்களா. இறைத்தார்களா!

# செண்பகமே...செண்பகமே...

என்னதான் சொல்லுங்கள், பழைய பழியைத் தீர்த்துக் கொள்வதற்காக ஒரு தகப்பன் தன் மகன் விரும்பி மணமுடித்த பெண்ணுடன் சேரவிடாமல் பண்ணுவதற்காகச் சுருட்டைத் திருப்பித் திருப்பிப் பற்ற வைத்துக் கொண்டு 'ஆவணி மாதம் பதினாலாந்தேதி, செவ்வாய் தோஷம், ஒரே வழி விவாகரத்து' என்று அத்தனை புருடா விட்டு மகனையும் மருமகளையும் பிரித்து வைப்பாரா, என்ன?

ராமராஜன் ஹீரோ. கங்கை அமரன் டைரக்ஷனில் என்றால் மனிதர் கொஞ்சம் வளைந்து கொடுப்பார் போலிருக்கிறது. பரவாயில்லை; பொறுத்துக் கொள்ள முடிகிறது.

ரேகா ஹீரோயின். பாவாடை தாவணியில் பளிச்.

சந்திரசேகர் ரொம்ப நாட்களுக்குப் பிறகு தலையைக் காட்டியிருப்பதாலோ என்னவோ, வெகு சிரத்தையாகச் செய்திருக்கிறார்.

அட, அட, அட, நம்ம சில்க்கு ஸ்மிதா!

அரை குறை ஆடையில் டான்ஸ் இல்லாமல், அகன்ற கண்களால் பேசி நாயகனையும் நாயகியையும் இணைத்துவைக்கும்வேலையைச் செய்கிறார் — கச்சிதமாக. இப்படியே குஸன்டாக வேஷம் கட்டினால், தமிழ்த் திரையில் இவருக்கு ஒரு மறுபிறவி காத்திருக்கிறது.

இரண்டு செவிடர்களுக்கும் ஹியரிங் எய்ட் உதவியால் காது கேட்பதும், காது கேட்டதால் ஊரில் பேசப்படும் அத்தனை அக்கிரமப் பேச்சுகளையும் கேட்க முடியாமல் காது கேட்கும் கருவிகளைத் தூக்கிக் கடாசுவதும் — ரசிக்க முடிகிறது.

செந்தில், எஸ். எஸ். சந்திரன், மூர்த்தி, குழுவின் நகைச்சுவையைத்தான் ரசிக்க முடிய மாட்டேன் என்கிறது.

நெகிழ வைக்கிறாற் போல் அப்படி ஒன்றும் காட்சிகள் இல்லை என்றாலும்; தாளம் போட வைக்கிற மாதிரி இரண்டு பாட்டுகள்.

வாசலிலே பூசணிப்பூ...

மஞ்சப் பூசி...

கங்கை அமரன் அதிக செலவில்லாமல், ஆடம்பரம் இல்லாமல் நீட்டாக ஒரு படத்தைத் தருவது எப்படி என்ற வித்தையை நன்றாகவே கற்று வைத்திருக்கிறார். இன்னும் கொஞ்சம் பின்னியிருந்தால் இன்னும் கொஞ்சம் எடுபட்டிருக்கும்!

— ஜெயமன்மதன்



குளித்துவிட்டு பாத்ரூமிலிருந்து வெளிப்பட்ட வசந்தா, கண்ணாடி முன் நின்று நைட் டிரெஸ்ஸின் பட்டன்களைப் போட்டுக் கொண்டே, "தூங்கிட்டீங்களா மாது?" என்றாள்.

மாதவனிடமிருந்து பதில் ஏதும் வராததால் மறுபடியும் "தூங்கிட்டீங்களா...?" என்று ஆரம்பிக்க, கட்டிலில் மல்லாக்கப் படுத்து, விட்டத்தை வெறித்துக் கொண்டிருந்த மாதவன் எரிச்சலுடன் கத்தினான்.

இதென்ன கேள்வி? தூங்கியிருந்தா, முழிச்சுக்கிட்டு, 'ஆமா'ன்னு சொல்லணுமா? இல்லே, முழிச்சுக்கிட்டிருந்தா 'இன்னும் தூங்கலே, பாரு கண்ணு தொறந்துதான் இருக்கு'ன்னு காட்டணுமா?"

வசந்தா வெடுக்கென்று திரும்பினாள்.

"நா என்ன சொல்லிட்டேன்னு இப்படி சண்டைக்கு வர்றீங்க?"

"ஆமா, நா சண்டைக்குத்தான் வரேன்... பொழுது போவலே இல்லே, அதான்..."

அணைத்துக் கொண்டான்.

தூங்கும் மகனின் முகத்தையும் தலையையும் தடவிக் கொடுக்கையில், அந்தக் கன்னத்துச் செழுமையும், வழவழா ஸ்பரிசமும் ஏனோ வசந்தாவின் ஜாடையை அப்பட்டமாய்ப் பிரதிபலிக்க, சற்றே எரிச்சல் குறைந்து ஒருவிதமான ஏக்கம் பரவிற்று மாதவனுக்குள்.

வசந்தாவை இப்படித் தொட்டுப் பேசியோ, ஆசைதீர அணைத்து முத்தமிட்டோ எத்தனை காலமாயிற்று!

முன்பெல்லாம் இப்படியா இருந்தது?

இரவு படுக்கும் முன் பனிச்சென்று குளித்து, மணக்க மணக்க அவள் பாத்ரூமிலிருந்து வெளியே வந்ததும் வராததுமாய், கிட்டத்தில் ஓடிப் போய் அவளை மொத்தமாய் நுகர்ந்து...

அந்தச் சந்தோஷமும் சல்லாபமும் எங்கே தான் போயின?

சரி, நாமாகப் போய்க் குழைய வேண்

# வேரில்லாத

சிவசங்கரி

"ப்ச்... வரவர சாதாரணமா பேசவே உங்களுக்கு மறந்திடுச்சுன்னு நினைக்கிறேன். எப்பப் பாரு நாய் மாதிரி வள்ளுன்னு..."

"ஆமா... அப்படித்தான் நாய் மாதிரி தான் விழுவேன்... மிருகங்க மத்தியில வாழறப்போ நாமளும் அது மாதிரிதானே நடந்துக்கணும்?"

வசந்தா கோபத்துடன் இடுப்பில் கையை வைத்தபடி நின்றாள்.

"இப்ப யாரை மிருகம்னு சொல்றீங்க?"

மாதவன் கைகளைக் கூப்பிக் கொண்டான்.

"அம்மா தாயி... யாரையும் இல்லே... நீ சண்டை போட ஆரம்பிச்சிடாதே... எனக்குத் தூக்கம் வருது..."

திரும்பிப் படுத்தவனுள் மாலையில் அப்பாவும் அத்தம்மாவும் அவனுக்கு எதிரிலேயே வாக்கு வாதம் செய்து கொண்டது எட்டிப் பார்க்க, எரிச்சல் அதிகமானது.

இப்போதெல்லாம் தினமும் வீட்டுப்படி ஏறும்போதே ஏதேனும் புகார் ஒன்றை நின்று கேட்க வேண்டி வருவதும், ஒருத்தருக்குச் சமாதானம் சொல்லப் போனால் அடுத்தவருக்குக் கோபம் அதிகமாவதும்... இதன் காரணமாய் வசந்தாவுக்கும் இவனுக்கும் நடுவில் தர்க்கம் மூளுவதும் ரொம்பவும்தான் அதிகமாகிவிட்டது.

உப்புப் பெறாத சமாசாரங்களுக்காக...

மேலே எண்ணத்தைத் தொடர விரும்பாதவனாய் மாதவன் மீண்டும் புரண்டு, சற்றுத் தள்ளிப் படுத்திருந்த ராஜாவை

டாம், இன்று அவளாய்ப் பேச வந்தபோது கூட எதற்காக, என்ன, ஏது என்று கேளாமல் அப்படி எரிந்து விழுந்தேன்?

கூம்பிய உணர்வுகள் லேசாய் விரிந்த மாதிரி தோன்ற, மாதவன் மெள்ளத் திரும்பினான்.

"ஸாரி வசு... என்னமோ கோவத்துல பேசிட்டேன்... எதுக்குக் கூப்பிட்டே?" என்றான் கிசுகிசுப்பாய்.

மேஜையில் இருந்த கைப்பையிலிருந்து ஏதோ காகிதத்தையும் பேனாவையும் எடுத்துக் கொண்டிருந்த வசந்தா கோபம் மாறாமல் பதில் சொன்னாள்.

"எதுக்கும் கூப்பிடலே..."

"ப்ச், பார்த்தியா! கோவிச்சுக்கிறியே... நாந்தான் ஸாரி சொல்லிட்டேன் இல்லே, அப்புறம் என்ன? சொல்லும்மா ப்ளீஸ்..."

அவனுடைய 'சொல்லும்மா'வில் ஒரு விநாடி நெகிழ்ந்த வசந்தா அருகில் வந்து கட்டில் விளிம்பில் அமர்ந்து கொண்டாள்.

"ராஜாவை ஸ்கூல்ல சேர்க்கணுன்றது உங்களுக்கு நினைப்புல இருக்கா?"

"ஏன் இல்லாம? உங்க ஆபீஸ் மானேஜரோட மனைவி ஏதோ நல்ல ஸ்கூல்ல பிரின்ஸிபாலா இருக்காங்க, அவங்ககிட்ட சொல்லியிருக்கேன், சுலபமா 'சீட்' கிடைச்சிடும்னு நீ சொல்லியிருந்தியே!"

"இன்னிக்கு அவங்க ஸ்கூலுக்குப் போய் அப்ளிகேஷன் வாங்கிட்டு வந்திருக்கேன்... எல்லா விவரங்களையும் இதுல எழுதிக் கொடுத்துட்டா, சீட் கொடுக்கறேன்னு அந்தம்மா சொன்னாங்க! ஒவ்வொருத்தர்

மாதிரி கியூவுல நிக்காம நமக்கு உடனே கொடுக்கறேன்னு அவங்க சொல்லிட்டது எத்தனை நிம்மதியா இருக்கு தெரியுமா?''

மாதவன் சந்தோஷத்தில் கண்களை அகல விரித்தான்.

''வெரிகுட்... ஐயாயிரம், பத்தாயிரம்னு நன்கொடை கேக்கற இந்தக் காலத்துல நமக்கு இப்படி ஒரு அதிர்ஷ்டமா! இந்தச் சந்தோஷத்தைக் கொண்டாடியே தீரணும். வசு, கிட்ட வாயேன்...''

''அ? அதெல்லாம் அப்புறமா... இப்ப மொதல்ல இந்த அப்ளிகேஷன் ஃபாரத்துல எல்லாத்தையும் எழுதிப் பூர்த்தி பண்ணியாகணும்!''

''இப்பவேவா? நாளைக்குச் செய்துக்கக் கூடாதாம்மா?''

''இல்லே மாது... காலையில எழுந்தா நூறு வேலை குறுக்கே வந்திடும். யாராவது ஏதாவது சொன்னு உங்க மூட் கெட்டுடும்...

# ரங்கள் 21



இப்ப சோம்பலா இருந்திட்டோம்னு அப்புறம் நமக்குத்தான் கஷ்டம்... எழுந்திருங்க... ம், ஒவ்வொண்ணு நீங்க சொல்லிக்கிட்டே வாங்க, நா எழுதறேன்... முதல்ல பேரு...''

திறந்த பேனாவுடன் அவள் தயாராக உட்கார, மாதவன் ஒரு நிமிஷம் யோசித்தான்.

''அவனுக்குத்தான் இன்னும் முறைப்படி பேர் வைக்கவே இல்லையே, வசு! ராஜான்னு சும்மா வீட்டுல கூப்பிடறோம், அதையேவா இதுல எழுதறது?''

''இப்ப வெச்சிட்டாப் போச்சு... நல்ல பேரா ஒண்ணு சொல்லுங்க...''

''கார்த்திகேயன்னு வெக்கலாமா? மாடர்னு, 'கார்த்திக்'னுகூட கூப்பிட்டுக்கலாம்... அப்பாவுக்கும் திருப்தியா...''

அவனை முடிக்கவிடாமல் வசந்தா முறைத்தாள்.

''ஏன், முருகன் பேர்தான் வெக்கணுமா? அத்தைக்குப் புடிச்ச பேரா வெச்சுக் கூப்பிட்டா, பையன் 'ஏன்'னு கேக்க மாட்டானா? எடுத்த உடனே தகராறு செய்ய ஆரம்பிச்சிட்டீங்களே!''

நானா தகராறு செய்கிறேன் என்று கத்த வாயெடுத்த மாதவன், சற்று முன் எழுந்த கேள்விகளும், செய்து கொண்ட தீர்மானமும், நினைவுக்கு வர, பிரயத்தனப்பட்டு வாய் மூடினான்.

ஒரு நிமிஷ மௌனத்துக்குப் பின் வசந்தாவே பேசினாள்.

''நாம ஏற்கெனவே நிறைய பேசிட்டோம் மாது, இதைப் பத்தியெல்லாம்... எந்த பேரு வெச்சாலும் யாருக்காவது குறை இருந்துக்கிட்டேதான் இருக்கு... அதனால இப்ப இருக்கிறபடி 'ராஜா'ன்னே ஸ்கூல்லேயும் கொடுத்துடுவோம்! யாருக்கும் வருத்தம் இருக்காது பாருங்க...''

முதலில் தயங்கி, பின், வேறு வழியில்லை என்பதால் அதை ஏற்று, தலையாட்டிய மாதவன், ''சரி, அப்படியே எழுது... அடுத்து என்ன கேக்கறாங்க, அம்மா பேரு, அப்பா பேரு, வீட்டு அட்ரஸ் — இவ்வளவு தானே?'' என்றான்.

வரிசையாய் எழுதிக் கொண்டே வந்த



**''விட்டு விட்டுக் காய்ச்சல் வந்துச்சுன்னு அந்த டாக்டர்கிட்டே போனது தப்பாப் போச்சு!''**

**''ஏன்?''**

**''தொடர்ந்து காய்ச்சல் இருக்கும்படி பண்ணிட்டார்!''**

**— அ. பெ. ரவி.**

வசந்தா, திடுமென நிமிர்ந்தாள்.

''இங்கே பார்த்தீங்களா, நீங்க இந்தியரான்னு கேட்டுட்டு, பின்னாடியே 'உங்க மதம் எது?'ன்னு ஒரு கேள்வி கேட்டிருக்காங்க! இதுக்கு என்ன பதில் எழுதட்டும்?''

மாதவன் புருவங்களைச் சுருக்கிக்கொண்டு அவளைத் தீவிரமாகப் பார்த்தான்.

''மதமா? நாமதான் அதுல நம்பிக்கை வெக்க வேணாம்னு முடிவு பண்ணியிருக்கோம் இல்லே? அதனாலே, அந்தக் கேள்விக்குப் பதில் எதுவும் எழுத வேணாம்.... சின்ன கோடு போட்டு விட்டுடு....''

அப்போதைக்கு அந்தக் கேள்வியைத் தவிர்த்து, மற்ற விவரங்களை மட்டும் எழுதி விண்ணப்பத்தைப் பூர்த்தி செய்துவிட்ட திருப்தியோடும் சந்தோஷத்தோடும் தூங்கப் போனாலும், அடுத்து வந்த நாலாம் நாள் இருவரும் அலுவலகத்துக்கு லீவு போட்டுவிட்டு, மகனைப் பள்ளியில் சேர்க்கும் குதூகலத்தோடு பள்ளி முதல்வரைச் சென்று பார்த்தபோது, விண்ணப்பத்தில் பூர்த்தி செய்யாமல் விட்ட காலி இடம் ஒரு பெரிய பிரச்னையாக எதிரில் வந்து நின்றது.

''மதம் எதுன்ற கேள்விக்கு எதுவுமே எழுதாம விட்டிருக்கீங்களே? கவனிக்கலியா?'' என்று முதல்வர் கேட்க, ஒருவரை ஒருவர் தயக்கமாகப் பார்த்துக் கொண்டார்கள்.

அப்புறம் வசந்தாதான் மெதுவாய்ப் பதில் கூறினாள்:

''ஸாரி மேடம், எங்களுக்கு அதுல நம்பிக்கை இல்லே....''

கையிலிருந்த பேனாவையும் பேப்பரையும் அப்படியே மேஜையில் போட்டுவிட்டு, நாற்காலியில் பின்னுக்குச் சாய்ந்து உட்கார்ந்த முதல்வர், லேசான புன்சிரிப்போடு இருவரையும் ஏறிட்டார்.

''நம்பிக்கை இருக்கு, இல்லேன்றது வேறம்மா.... ஆனா, உங்களுக்குன்னு ஒரு மதம் இருக்கணுமே? அது என்னதுனுதான் கேக்கறோம்....''

''அப்படி எதுவும் எங்களுக்கு இல்லே......''

முதல்வர் கண்ணாடியைக் கழற்றிக் கையில் வைத்துச் சுழற்றியபடியே தலையை ஆட்டி, 'நான் அதைக் கேட்கவில்லை' என்பதுபோல் மறுத்தார். பின், ''உங்களுக்கு இல்லாட்டி பரவாயில்லே, ஆனா உங்களைப் பெத்தவங்க... ஏதாவது ஒரு மதத்தைச் சேர்ந்தவங்களா இருந்திருக்கணும், இல்லே? உங்க பேரு 'மாதவன்'னு சொல்றீங்க, அப்பமன்னு ஹிந்துதானே?'' என்று வினவினார்.

மாதவன் 'ஆம்' என்று தலையாட்ட, வசந்தா அவசரமாய்க் குறுக்கிட்டாள்.

''அவரு ஹிந்துதான் மேடம், ஆனா, நா ஒரு கிறிஸ்டியன்..... கல்யாணத்துக்கு முன்னாடி! இப்ப இது ரெண்டுல எதையுமே நாங்க ஃபாலோ பண்ணறதில்லே... நாங்க காதலிச்சுக் கல்யாணம் பண்ணிக்கிட்டவங்கன்னு உங்க கணவர் உங்ககிட்டே சொல்லியிருப்பார்ன்னு நினைச்சோம்...''

''இல்லே மிஸஸ் மாதவன்.... அவர் ஆபீஸ்ல நீங்க வேலை செய்றீங்கனுதான் தெரியுமே தவிர, இதெல்லாம் தெரியாது! சரி, ஜாதி மதம் எதுவும் பாக்கறதில்லேன்னா, உங்களுக்குக் கடவுள் நம்பிக்கை இடையாதா?''

''.........''

''சொல்லுங்க, நம்பிக்கை இருக்கு, இல்லேனு ஒத்துக்கறதுகூடவா கஷ்டம்?''

''அதில்லே..... குறிப்பிட்ட சாமின்னு கும்பிடறதில்லையே தவிர, மனசுக்குள்ள அப்பப்ப 'கடவுளே!'னு பொதுவா நினைக்கறது உண்டுதான்! அது ஒரு மாதிரி பழக்கதோஷம்னு சொல்லலாம்....''

''அதே மாதிரிதான் இந்த அப்ளிகேஷனும்! கால காலமா சில விவரங்களைச் சேகரிக்கற விதத்துல இதையும் அமைச்சிருக்காங்க..... அதுல ஒரு விவரம் இல்லேன்னாக்கூட விண்ணப்பத்தை ஏத்துக்க முடியாது, தெரியும் இல்லே?''

இதுவரை பலவிதமாகப் பேசியும் இன்னமும் இதையே வலியுறுத்துகிறீர்களே என்கிற அலுப்பு முகத்தில் அப்பட்டமாய்த் தெரிய, மாதவன் கேட்டான்:

''தப்பா எடுத்துக்காதீங்க மேடம், எங்க நிலையை நாங்க சொன்னப்புறமும் நீங்க அதையே.....''

''மிஸ்டர் மாதவன், நீங்க ஒரு விஷயத்தை மறந்திட்டுப் பேசறீங்க! இந்த ஸ்கூல் எனக்குச் சொந்தமில்லே! நா இங்க வெறும் பிரின்ஸிபால்தான்... அப்படியே சொந்தமா இருந்தாக்கூட, அரசாங்கம் வெச்சிருக்கற சில சட்டதிட்டங்களை நாங்க அனுசரிச்சே ஆகணும்! அப்ளிகேஷன்ல கேட்டிருக்கற எந்த விஷயமும் எங்களுடைய சொந்த லாபத்துக்காக இல்லே... எந்த ஸ்கூலுக்குப் போனாலும் இந்த விவரமில்லாம உங்களுக்கு சீட் கிடைக்காது!''

கறாராய் அவர் பேசி நிறுத்த, மாதவன் தவிப்புடன் வினவினான்.

''இப்ப என்ன செய்யணும்னு சொல்றீங்க மேடம்?''

''இது வெறும் அப்ளிகேஷன் மட்டும்தான்.... இதுல ஒரு மதத்துடைய பேரை எழுதறதால, அந்த மதத்தத் தழுவிடணும்னோ அவங்க கடவுளை வணங்கியே ஆகணும்னோ கட்டாயம் எதுவும் இல்லே! அதனாலே, ஒரு வார்த்... எழுதிடறதுல உங்களுக்கு

என்ன கஷ்டம்? ஹிந்து அல்லது கிறிஸ்டி யன்னு சும்மா ஒரு பேச்சுக்காக எழுதிடற தால என்ன ஆயிடப் போகுது?''

இதுவரை இருந்த கனிவு மறைந்து, ஒரு கண்டிப்பு அவர் குரலில் தென்பட, மாதவ னும் வசந்தாவும் மறுபடியும் ஒருவரை ஒரு வர் பார்த்துக் கொண்டார்கள்.

''என்ன யோசிக்கிறீங்க? நம்ம ஊர்ல முக்கால்வாசிப்பேர், புருஷன் வீட்டுக்குப் போய் அவங்க பழக்க வழக்கங்களைத்தான் அனுசரிக்கறாங்க... அதனால, மிஸ்டர் மாத வனோட ரிலிஜனை, அதாவது 'ஹிந்து'னு போட்டுடட்டுமா?''

வசந்தா அவசரமாகக் குறுக்கிட்டாள்.

''அ..... அது எப்படி? இப்ப வெறும் எல். கே. ஜி. அட்மிஷனுக்காக இதைக் குறிப்பிட்டு எழுதிட்டம்னு, அப்பறம் காலேஜ், வேலைனு எல்லாத்துக்கும் இதையே இல்ல எழுதணும்? வேணும் வேணும்னு சொல்லி, கடைசியில அவன் ஹிந்துவாவே இல்ல ஆயிடுவான்!''

''இல்லே வசு, இது ஒரு பேச்சுக்குத் தானே? சும்மா எழுதறதாலே ஒண்ணும் ஆயிடாதுனு இப்பத்தானே மேடம் சொன் னாங்க?''

''அப்படீன்னு கிறிஸ்துவ மதம்னே எழுதிடலாமே? எதை எழுதினா என்ன?''

மற்றவர் முன்னிலையில் இருப்பதை மறந்து இருவரும் வாக்குவாதம் செய்ய ஆரம்பிக்க, முதல்வர் கையைக் குறுக்கே நீட்டித் தடுத்தார்.

''உங்க டிஸ்கஷனை வெளிய வெச்சுக் கங்க... இன்னும் நிறைய பேரு காத்திருக் காங்க. அவங்களை எல்லாம் நா பாக்கணும். நீங்க வீட்டுக்குப் போய் ஒரு முடிவு பண் ணிட்டு வாங்க.... வேண்டப்பட்டவங்கன்ற தால, இன்னிக்குச் சாயங்காலம் வரை உங் களுக்காக ஒரு சீட் வெச்சிருக்கேன். அதுக் கப்புறம்னா, ஸாரி... என்னால எதுவும் செய்ய முடியாது!''

அறையினுள் நுழைந்தபோது இருந்த குதூகலம் முற்றிலுமாய்க் கரைந்து போய், சற்றும் நினைத்துப் பார்க்காத ஒரு விஷயம் பூதாகாரமாய் வளர்ந்து பயமுறுத்த, அன்று மாலைக்குள் மட்டுமல்ல, அதற்குப் பிறகு வந்த நாட்களிலும் உறுதியான முடிவு எதை யும் எடுக்க முடியாமல் திண்டாடி, எனக்குத் தான் வாய் இருக்கிறது என்கிற தினுசில் ஆளாளுக்குத் தம் கோணத்திலிருந்தே தர்க் கித்து, கிடைத்த வாய்ப்பை நழுவவிட்ட தோடு, தேடிப்போன மற்ற பள்ளிகளிலும் இதே பிரச்னை குறுக்கே நந்தியாய் நின்ற தில்—

நல்ல கல்வியும், ஒழுக்கமும் கிடைக்கும் என்று சொல்லப்பட்ட எந்த பெரிய பள்ளி யிலும் இடம் கிடைக்காமல், பணம் பண் ணும் வியாபாரத்துக்காக மட்டுமே ஆரம் பிக்கப்பட்ட ஒரு சாதாரண சின்ன பள்ளிக் கூடத்தில்தான் கடைசியில் ராஜாவைச் சேர்க்கும்படி ஆயிற்று — அதுவும் ஐந்தாயி ரம் 'நன்கொடை' கொடுத்த பிறகு!

(தொடரும்)

# காலடியில் சில கனவுப் பூக்கள்

வெளிச்சத்தைத் தேடிக் காகங்கள் கரைந்து அலையும் விடியல் நேரம்...

தெருவில் இருந்து சற்றுத் தள்ளி, தனித்துப் போயிருந்த அந்தக் குடிசை, வயதான கிழவி போல் நொடித்துப் போயிருந்தது. கூரை வேய்ந்து எத்தனை காலமாயிற்றோ?... மண் சுவரில் ஆங்காங்கே பொத்தல்கள். ஒரு பெரிய காற்றடித்தால் போதும். சத்தமில்லாமல் ''பொசுக்''கென விழுந்து விடுவேன் எனப் பயமுறுத்திக் கொண்டிருந்தது.

குடிசைக்குள்...

எண்ணெய் வரண்டு, நுருத்திமாடி எரிந்து கொண்டிருந்த சிம்னி விளக்கின் கரிதட்டிய ஆரஞ்சு வெளிச்சத்தில் கூழைக் கரைத்து ஊற்றிக் கொண்டிருந்தாள் பாவாயி. அவள் மகன் செவத்தான் இன்னும் தூங்கிக் கொண்டிருந்தான்.

''ம்மா...'' — என வாசலில் கட்டியிருந்த மாடு கத்தியது. கைக்காரியத்தை அப்படியே விட்டுவிட்டு அவசரமாய் வெளியே ஓடி வந்தாள் பாவாயி.

நிறைய கிளைவிட்டிருந்த பெரிய வேப்ப மரத்தடியில் கட்டியிருந்த அந்தப் பசு அவளைப் பார்த்துக் கொம்பை அசைத்தது. மாட்டின் வயிறு நன்றாகப் பருத்து முன்னே தள்ளியிருந்தது. பால் காம்புகள் புடைத்து, நன்றாகச் சுரந்து, மடி இறங்கியிருக்க, அதன் வயிற்றுக்குள் குட்டி நெளிவது பாவாயிக்குத் துல்லியமாய்த் தெரிந்தது. உள்ளே பொறி தட்டியது.

பத்து மாதக் கன்றுக் குட்டியாக, வாரத்துக்கு வளர்க்கப் பேசி ஓட்டி வந்து, அவர்களின் மூன்று வருடக் கண்காணிப்பில் நன்றாகக் கொழுத்துத் திரண்டிருந்த அந்தப் பசு இன்று நிறைமாத கர்ப்பம். செவத்தான்



அதற்குச் செல்லமாய் மீனு என்று பெயரிட்டிருந்தான்.

"மீனு இப்பவோ பின்னயோன்னு இருக்கா... இன்னும் ரெண்டு நாளிலே நிச்சயம் கன்னு போட்டுடுவா... மூணு வருஷ ஒழைப்பு வீணவலே. மீனு எங்க வயத்திலே பால்வாக்கப் போறா... என் தங்கம்... எங்க வூடு வெளங்க வந்த லட்சுமி" — என கைவிரல்களை முகத்தில் நொடித்துச் சொடுக்கி திருஷ்டி கழித்தாள் பாவாயி. அவள் வாஞ்சையுடன் முகவாயைத் தடவி விட, மீனு சின்னதாய்ச் சிணுங்கியது. பாவாயியின் கண்களுக்கு மீனு ஒரு காமதேனுவாய்க் காட்சியளித்தாள்.

தூரத்தில் ஒரு சேவல் அரக்கப் பரக்க விழித்துக் 'கொக்கரக்கோ' என்றது.

மீனுவின் முதுகை வருடிக் கொண்டிருந்த பாவாயி, விழிகளைக் குடிசைப் பக்கம் திருப்பி — "டே... செவத்தான்... எந்திரிடா... வெள்ளி மொளைச்சுச் சேவல் கூவிடிச்சு... இன்னும் என்னடா தூக்கம் வேண்டிக் கிடக்கு? மீனுவை மேச்சக்காட்டுக்கு ஒட்டிப் போக வாணுமா?" — எனப் பெருங்குரலில் அதட்டினாள்.

அதற்குள் மீனு அடித்தொண்டையில் கத்திற்று.

"ம்மா..."

இந்தக் கத்தல் செவத்தானை உசுப்பி விட்டது. எழுந்ததும் நேராக மீனுவிடம் போய் அதன் கழுத்தை இறுகக் கட்டிக் கொண்டு — "எஞ்செல்லம்" — என ஒரு குழந்தையைத் தடவிக் கொடுப்பது போல் அதன் கழுத்தைத் தடவிக் கொடுத்தான். அந்தப் பன்னிரண்டு பிராயச் சிறுவனின் பாசமான அணைப்பில் அந்தப் பசு தலையைச் சிலுப்பிக் கொண்டது. அடி வயிறு கனக்க ஏகமாய் மூச்சிரைத்தது. அதைக் கவனித்தவனுக்கு மனம் சங்கடப்பட்டது.



# பாரதி வீரராகவன்

வானத்தை நிமிர்ந்து பார்த்தவன் பரபரத்தான். கீழ்வானம் செம்மையாய்த் தெரிந்தது. இருட்டு இன்னும் விலகியிருக்கவில்லை.

"யம்மா... பொளுது ஏறிடிச்சு... எதிர் வூட்டு ராசாத்தி கூட இன்னேரம் போயிருப்பா. நான் ஒண்டியாத்தான் போகணும்... இம்... யம்மா... கூளு கரைச்சிட்டியா? சீக்கிரம் எடுத்தா..." — என அவசரமாய் மீனுவைக் கட்டியிருந்த கயிற்றை அவிழ்த்தான்.

தொலைவில், ராசாத்தியுடைய ஆடுகளின் கழுத்திலிருந்த மணிகள் குலுங்கும் ஓசை செவத்தானுக்குக் கேட்டது. ராசாத்தியுடன் போய்ச் சேர்ந்து கொள்ள வேண்டுமே; மீனுவின் வாலை முறுக்கித் திருகி அதை விரட்டினான்.

அதைப் பார்த்த பாவாயிக்கு என்னவோ போலாகி விட்டது.

"அட வெவரங்கெட்ட பயலே... வாணாண்டா... அந்த மாதிரியெல்லாம் இம்சை பண்ணி வெரட்டாதே... இத்தினி நாள் மாதிரியில்லே... மீனு நெறை மாசமா இருக்கா... கன்னு போடற நாளு... மேச்சக் காட்டிலே ஏடா கூடமா ஏதாச்சும் ஆயிடுச்சுன்னா ராசாத்தியெப் பாத்துக்கச் சொல்லிட்டு நீ ஓடியாந்து வெவரஞ் சொல்லு. நா எசமானர் கழனியிலே நெல்லறுத்துக்கினு இருப்பேன். என்னா புரியுதா...? மெதுவாலே ஒட்டிக்கினு போ... ஜாக்கிரதைடா... நம்ப எதிர்காலமே மீனுகிட்டத்தான் இருக்கு. அதை மனசிலே வெச்சுக்கோ..."— மீனுவை ஒரு தாயின் கரிசனத்துடன் தட்டிக் கொடுத்து அனுப்பி வைத்தாள். நிறைய எதிர்பார்ப்புகள் அவளது நெஞ்சில் குமிழியிட்டுப் பொங்கின. மூன்று வருட உழைப்புக்குக் கைமேல் பலன் கிடைக்கப் போவதை நினைத்ததும் எங்கோ பறப்பது போல் அவள் மனம் சிறகடித்துப் பறந்தது. அந்தத் திடீர் சந்தோஷம் அவளது நாடி நரம்புகளில் ஜிவ்வு ஜிவ்வெனப் பரவி அவளைத் திக்குமுக்காட வைத்தது.

உள்ளே வந்த பாவாயிக்குச் சப்பென்றாகி விட்டது. வரதன் இன்னும் எழுந்திருக்கவில்லை. கடைவாயில் எச்சில் ஒழுகத் தூங்கிக் கொண்டிருந்தான்.

"நடுப்பட்டி எசமானரண்டெ வாரத்துக்குப் பேசி மீனுவை இட்டாந்ததோடெ எம் புருஷன் வேலை முடிஞ்சு போச்சு. இந்த மூணு வருஷமா செவத்தான்தான் எல்லாம்... அந்த சின்னப்புள்ளே வெயில்னும் பாக்காமெ, மழைனும் பாக்காமெ மேச்சாந்திடுது. சும்மா சொல்லக் கூடாது... செவத்தான் ஒழைப்புதான் அதிகம். இந்த ஆளு இருந்து யாருக்குப் புண்ணியம்? ஒரு நாளாவது வைக்கோலோ, சோளத்தட்டோ, சாமத்தாளோ கொண்டாந்து போட்டிருப்பாளா...? ஊஹூம்.... ஒரு நாளுமில்லே... இந்த ஆளெ நினைச்சா ஒடம்பெல்லாம்

எரியுது... பஸ் ஸ்டாண்டிலே மூட்டை தூக் கித் தெனமும் பதினெஞ்சு இருபதுன்னு சம்பாதிக்க வேண்டியது. எளவெடுத்த சாராயக் கடையிலே எல்லாத்தையும் கொண்டு போய்க் கொட்ட வேண்டியது. வூட்டுச் செலவுக்கு என்னய்யா பண்ணற துன்னு கேட்டா கையை நீட்ட வேண்டியது. அடிவாங்கி அடிவாங்கி எஞ்சதையெல்லாம் காப்புக் காச்சுப் போச்சு. பொட்டச்சி நா கூலிக்குப் போயி வவுறு கழுவ வேண்டி யதா இருக்கு... அதுவும் அரை வவுத்துக் கஞ்சிதான் குடிக்க முடியுது. சீ... சோத்துக் குன்னு சல்லிக்காசு தராத ஆம்புளேயும் ஒரு ஆம்புளையா...? இம்... அந்த ஆளு சோறு போடாட்டியும் பரவாயில்லே... உடுப்பு வாங்கித் தராட்டியும் போவுது. அடிச்சு நொறுக்காம இருந்தா பத்தாதா...?'' — பாவாயி ஆவேசம் வந்தவள் போல் மனத் துக்குள் பொரிந்து தள்ளினாள். கண்ணும் மூக்கும் சிவந்து போயிருந்தது.

அவளுக்கு விடிவே கிடையாதா? கண வனை ஒதுக்கவும் அவளால் முடியவில்லை.

எப்போது விடியும்?

''எப்படியும் இன்னும் ரெண்டு நாட்க ளிலே எங்கஷ்டமெல்லாம் விடிஞ்சிடும்... மீனு கன்னு போட்டுடுவா... அதுவும் பொட்டைக்கன்னு போடணமேன்னு ஒருக் கம் பிள்ளையாரை வேண்டிக்கினு இருக் கேன். வாரத்துக்கு வளக்கற மாட்டோடெ மொத ஈத்து கன்னும், மொத ஈத்துப் பாலும் வளத்தறவங்களுக்குத்தான் சேரும். தெனமும் பத்து ரூபா பாலாவது டீக் கடைக்கு ஊத்தலாம். எப்படியும் ஒரு வரு ஷம் கறக்கும். எங்கவலே நீங்கின மாதிரி தான். பாலூத்திச் சேத்த காசிலே முதல்லே எம் புள்ளைக்குச் சட்டை, டிரவுசர் தெக்க ணும்... எனக்கு மாத்துச் சேலே அப்புறமா பாத்துக்கலாம். கூரை வேறே ஒழுகுது. ஐப்பசி அடைமழைக்குள்ளே அதையும் வேயணும்... இன்னும் எத்தனையோ ஆக வேண்டியது இருக்கு... எல்லாத்துக்கும் மீனு தான் கை குடுக்கப் போறா...!''

**ரா**சாத்தியும் செவத்தானும் காடு நோக்கிப் போய்க் கொண்டிருந்தார்கள்.

ராசாத்தியும் அவனிடுதான் இருப்பாள். அவள் மேய்க்கும் ஆறு ஆடுகளும் அவளுக் குச் சொந்தமானவை. செவத்தானைப் போல் வாரத்துக்கு ஓட்டி வந்து மேய்க்க வில்லை. அந்த வகையில் அவளுக்குக் கொஞ் சம் பெருமை. ஆனால் வெளிக்காட்டிக் கொள்ள மாட்டாள்.

''ஏண்டா செவத்தான், மீனு கன்னு போட்டதும் என்னடா செய்யப் போறே...?'' என்று கேட்டாள் ராசாத்தி.

''ஓ... அதுவா... முதல்லே நிறைய சீம் பால் கட்டி, சீனி சேத்துத் திம்பேன்... ஒனக்கும் எடுத்தாந்து கொடுப்பேன். அப் புறமா... இம்... தெனமும் குடிக்கிற நீச்சத் தண்ணிக்குப் பதிலா இனிமே பால்தான் குடிப்பேன்... அதுமட்டுமில்லே... ஒன்னே மாதிரி மோர் ஊத்தி கூழ் கரைச்சுக் கொண் டாருவேன்... ஆமா... அம்மா ஒண்ணும் திட்டமாட்டாங்க... வளத்த ரொணத்துக்கு இது கூட இல்லேன்னா எப்படி...''

**சூ**ரியன் அனல் தெறிக்க உச்சிக்கு வந்திருந்தான். ராசாத்தி ரப்பர் செருப்பு போட்டிருந்ததால் அவளுக்குக் கால் சூடு தெரியவில்லை... பாவம்... செவத்தான்... செருப்பில்லாத அந்தப் பிஞ்சுப் பாதங்கள் பூமியில் பதிந்து பதிந்து எழுந்த போது வெப்பம் கனல் ஊசிகளாய்த் துளைக்க அப் படியே துவண்டு போனான். கிழிசல் சட்டை தெப்பமாய் நனைய, நெற்றியில் வேர்வை முத்துக்கள் அரும்பி அரும்பிச் சரிந்தன. வெயிலின் உக்கிரம் தாங்க முடியாமல் செவத்தான் மீனுவுடன் ஒரு மரத்தடியில் ஒதுங்கினான். அவன் மனம் ஒரு புதிய தீர் மானத்தை உருவாக்கியது.

''பால் வித்த காசிலே முதல்லே வாங்க வேண்டியது காலுக்குச் செருப்பு... அப் பப்பா என்ன சூடு...! அடிப்பாதத்திலே கொப்புளம் போட்ட மாதிரி எரியுது. கம்மி விலையிலே ராசாத்தியாட்டம் ரப்பர் செருப்பே கூட போதும்...'' — என வாய் விட்டே முணுமுணுத்தான் செவத்தான்.

''என்ன யோசிக்கறே...?'' — என்று கேட்டபடி ராசாத்தியும் வந்தாள். ''மீனு எங்கடா?'' என்றாள்.

செவத்தான் மரத்தின் பின்புறம் கை யைக் காட்டினான்.

நிழலில் மூச்சுவாங்கப் படுத்திருந்த மீனு வின் வயிற்றில் குட்டி சூடு தாங்காமல் நெளிந்தது. மீனுவின் முகம் வேதனையால் கூம்பியிருந்தது.

பசி தாங்க மாட்டாமல் ராசாத்தியின் வயிறு 'கீர்' என்று கத்தியது. கூழைக் குடித்துவிட்டு, செவத்தானை ஏறிட்டாள். அவன் எப்போதோ பசியாறியிருக்க வேண் டும். ஏதோ சுகமான கற்பனையில் நகத்தைக் கடித்தபடி மரத்தின் வேரில் சாய்ந்திருந் தான். அவனது ஏக்கப் பெருமூச்சு போல் ஒரு பெரிய காற்று வீச அந்த மரம் சலசலத் தது.

'புஸ்' 'புஸ்'ஸென்று இரைத்துக் கொண்டு சட்டென்று எழுந்து நின்றது மீனு. என்னவோ ஏதோவென்று ராசாத்தி அதனருகில் ஓடினாள். அதன் கண்களில் லேசான சோகத்தின் நிழல் படர்ந்திருந்தது. பயத்தோடு அதை ஒருதரம் முழுதாய்ப் பார்த்தாள்.

அதன் முகச்சாடையிலிருந்து எதையோ சொல்லத் தயங்குகிறது என ஊகித்தவ ளுக்கு ஒரு நொடியில் எல்லாம் புரிந்து விட்டது.

அவளுக்கு இனிய அதிர்ச்சி! அவசர மாய்ச் செவத்தானை அழைத்தாள்.

''செவத்தான்... ஓடியாடா... மீனு குட்டி போடப் போறா...''

செவத்தான் கையும் காலும் ஓடாமல் அரக்கப் பரக்க விழித்தான்.

''ராசாத்தி... நான் ஓடிப் போயி அம்மா வெக் கூட்டியாரட்டுமா...?'' — எனப் பதை

''உங்க கம்பெனி முதலாளியிடம் அலவன்ஸ் கேட்டீங்களே, என்ன சொன்னார்?''
''எதற்கும் 'அலவன்ஸ்' வேணும்னு சொல்லிட்டார்...!''
— கடுவை கோபால்சாமி.

# சர்க்கரை பற்றிய பயத்தை விட்டொழியுங்கள்
# சர்க்கரையின் முழுச்சுவையை அனுபவியுங்கள்!

## இப்போது

# ஸ்வீட்'அன்'லோ

சர்க்கரைக்கு
பதிலாக




SWEET'N LOW

ஆரோக்கியத்தில் அக்கறை உள்ளவர்களுக்கு தேவை— ''ஸ்வீட் அன்லோ'' சர்க்கரை நோய் உள்ளவர்களுக்கு அவசியம் தேவை— ''ஸ்வீட் அன் லோ'' உடல் பருமனை குறைப்பதற்கும் ''ஸ்வீட் அன் லோ''



SWEET'N LOW

காபி டீ மற்றும் அனைத்து பானங்களிலும் சர்க்கரைக்கு பதிலாக உபயோகிக்கலாம்.

28 மேலை நாடுகளில் 30 ஆண்டுகளாக பிரசித்தி பெற்ற ''ஸ்வீட் அன் லோ'' இப்போது தமிழகத்தில் முக்கிய கடைகளில் கிடைக்கிறது.



SWEET'N LOW

ஒரு பாக்கெட் ''ஸ்வீட் அன் லோ''=இரண்டு ஸ்பூன் சர்க்கரைக்கு சமம்.



இந்தியாவில் தயாரிப்போர்.
**இபிஸ் ஹெல்த் எய்ட்ஸ் லிமிடெட்,** தும்கூர், கர்நாடகம்.

மொத்த விற்பனையாளர் (தமிழ்நாடு)
**யோக்ராஜ் எண்டர்பிரைசஸ்,**
870, டாக்டர் இராமசாமி சாலை, கே.கே. நகர்,
சென்னை-600 078 தொலைபேசி: 427738

**வாசகர் பங்கு:**

# தளபதி திடமதி



**பரிசு ரூ.400**

நீங்கள் எழுதும் துணுக்குகள் அடுத்தடுத்துப் பல இதழ்களில் பிரசுரமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டால் ஒவ்வொரு முறையும் பரிசுத் தொகை இரட்டிப்பாகும்! முதல் பிரசுரத்துக்குப் பரிசு ரூ. 25/-. அதிகபட்சப் பரிசு ரூ. 400/-! மாறி வரும் சூழ்நிலைகளுக்கு ஏற்ப நமது ஆஸ்தான ஜோக்கர், அரசியல், சமுதாயப் பிரச்னைகளை வைத்து என்ன 'விட்' அடிப்பார் என்பதைத்தான் மேடைப் பேச்சாகவோ, உரையாடலாகவோ கீழே உள்ள கூப்பனில் நீங்கள் எழுதி அனுப்ப வேண்டும். உறை மீது தயவு செய்து ''தளபதி திடமதி'' என்று குறிப்பிடவும்.

கூப்பன்:

கல்கி இதழ் 6.3.88 — முடிவு தேதி: 15.3.88.

தளபதி திடமதி: ..............................

..............................

..............................

..............................

..............................

..............................

..............................

..............................

..............................

..............................

..............................

என் பெயர்: ..............................

விலாசம்: ..............................

..............................

பதைத்தான்.

அதே நிமிஷம்...

மீனுவின் வயிற்றிலிருந்து குட்டி வெளியே வந்து விழுந்தது. இத்தனை நேரம் பட்ட கஷ்டத்தையெல்லாம் மறந்து, மீனு குட்டியை நக்கிக் கொடுத்து உஷ்ணப்படுத்தியது.

பத்து நிமிடத்தில்...

குட்டி தட்டுத் தடுமாறி எழுந்து நின்றது.

''டேய்... பொட்டைக் கன்னுடா...'' — என உற்சாகமாய்க் கூறினாள் ராசாத்தி.

செவத்தானுக்குப் புதையல் கிடைத்த மகிழ்ச்சி.

**ப**ஸ் ஸ்டாண்டில் மூட்டை தூக்கிக் கொண்டிருந்த வரதன் ஆள் விட்டு அழைக்கப்பட்டிருந்தான்.

நிறைய வியர்த்து ஓடிவந்து — ''எசமான்... கையோடு கூட்டியாரச் சொன்னீங்களாம்... ஒங்க அடிமை நா ஓடியாந்து நிக்கறேன்...'' — எனப் பவ்யமாய்க் கைகட்டிச் சொன்னான்.

பெரிய பீடிகையுடன் வீட்டினுள் போய் வெளியே வந்தார் எசமான். கையில் ஒரு புட்டி சீமைச்சரக்கிருந்தது. நிதானமாய் அதைத் திறந்து ஒரு கிளாஸில் ஊற்றி வரதனிடம் தந்தார்.

அவன் திகைத்துப் போய் விட்டான். வாங்கிக் கொள்ளத் தயக்கம் காட்டினான்.

''எனக்கெதுக்கு எசமான் இம்மாம் ஒசத்தியெல்லாம்...'' — என இழுத்தபடி சொன்னாலும் கண்களில் ஆவல் தேங்கியிருந்தது. நாக்கில் நீரூற, தலைத்துண்டை அவிழ்த்து முதுகில் போட்டு முன்னும் பின்னும் தேய்த்தான்.

''வரதா... சும்மா குடி... ஒனக்காகவே வாங்கியாரச் சொன்னேன்...'' — என அவர் பச்சைக் கொடி காட்டினார்.

வரதனுக்கு அது போதாதா?

எச்சில் இலைக்குப் பாத்தியப்பட்ட தெரு நாய் போல் வாலைக் குழைத்துக் கொண்டு இளித்து, கிளாஸை வாங்கி ''மடக்''கென்று ஒரே உறிஞ்சலில் காலி செய்தான்.

முதலாளி அவசரமாய் இன்னொரு கிளாஸை நிரப்பி அவனிடம் தர, வரதன் அப்படியே கிறங்கிப் போனான்.

மூன்றாவது கிளாஸ் காலியானதும் முதலாளி தாமதிக்காமல், குரலில் தேனைக் குழைத்துப் பேச ஆரம்பித்தார்.

''இதப் பாரு வரதா... எசமான் வார்த்தைக்கு நீ மதிப்புக் கொடுப்பேன்னு எனக்கு நல்லாவே தெரியும். நீ வாரத்துக்கு ஓட்டிட்டுப் போன மாடு இன்னிக்கு கன்னு போட்டிருக்கு... இந்த மொத சத்துப் பாலும், கன்னும் நாயமா ஒனக்குத்தான் சேரணும். வாரத்துக்கு விட்டா அதுதான் முறை. ஆனா... இப்ப அந்த மாடும் கன்னும் எனக்கு வேணும்... பட்டிணத்தில என் மகன் வீட்டுக்கு அனுப்பி வைக்கணும்... நானும் ரொம்ப நேரம் யோசனை பண்ணினேன். ஒன்னையும் கெடுக்கக் கூடாது. எனக்கும் காரியம் ஆவணும்... அதுக்காக ஒரு மாத்து ஏற்பாட்டைச் செஞ்சேன். நீ சம்மதிக்கறதா இருந்தா சொல்லறேன்... இல்லேன்னா வாணா...''

இன்னும் ஒரு கிளாஸ் வரதன் வயிற்றுக்குள் அடைக்கலமானது. போதை ஏற ஏற

"என்னங்க எசமான்.. எங்குணம் தெரிஞ்சும் என்னென்னமோ பேசறீங்களே... நான் ஒங்களுக்கு உசிருள்ளவரை கடமைப்பட்டவன். ஒங்க மாத்து ஏற்பாட்டுக்குச் சம்மதிக்கறேன். நீங்க என்ன சொன்னலும் கேக்கறேன். போதுமா..." — என்றான்.

முதலாளிக்கு மனம் கொள்ளா மகிழ்ச்சி. எங்கே தட்டினால் எங்கே விழும் என்று அவருக்குத் தெரியாதா? வரதனின் பலவீனம் அவருக்கு அத்துப்படியான ஒன்று.

கனைத்துச் செருமி மீண்டும் தொடர்ந்தார்.

"மாட்டையும் கன்னையும் இன்னிக்கே ஓட்டிட்டு வந்துடலாமுன்னு இருக்கேன். வல்லீசா ஒரு நூறு ரூபா தறேன். வளத்ததுக்குக் கூலியா வெச்சுக்க. அதுமட்டுமில்லே. மொத ஈத்துக் குட்டிக்குப் பதிலா வேறொரு குட்டியை வெள்ளிச் சந்தையிலே வாங்கித் தந்திடறேன். சரிதானே... இந்த ஜென்மத்திலே நீ நூறு ரூபாயை ஒரு தேதியிலே பாக்கப் போறதில்லே. வலிய வறதை ஒதறித் தள்ளாதே... என்ன சொல்றே, சம்மதமா?"

அவன் கொஞ்ச நேரம் யோசனையுடன் தயங்கினான்.

"என்ன யோசனே... வெள்ளி சந்தை வரை தாங்கமாட்டியா? சரி இப்பவே வேறெ கன்னுக்குட்டி நம்ம பட்டியிலிருந்தே புடிச்சுத் தறேன். டேய் முனியா அந்தச் செவலைக் கன்னைப் புடிச்சா. வரதனுக்கு இனமா கொடுத்துடுவோம்..." — எனக் குழைந்தார் முதலாளி.

வரதனுக்கு உச்சி குளிர்ந்து விட்டது. சீமைச் சரக்கை இவ்வளவு வாங்கி, வயிறு முட்டக் குடித்துவிட்டு அவரது வேண்டுகோளை எப்படி மறுப்பது...

"சரிங்க எசமான்... போலாம்... மாட்டைப் புடிச்சுத் தந்திடறேன்... பொறப்படுங்க...

செருப்புக்கள் சலசலக்கும் ஒலி கேட்கவே, அப்பனுடன் வேறு யாரோ வருகிறார்கள் என யோசித்தபடி செவத்தான் குடிசைக்குள்ளிருந்து வெளியே வந்தான்.

வரதன் ஓட்டி வந்த புதிய செவலைக் கன்றை அதே மரத்தடியில் கட்ட...

செவத்தான், பாவாயி இருவர் வயிற்றிலும் புளியைக் கரைத்தது.

செவத்தான் ஏதும் புரியாமல் குறுகுறுப்புடன் அம்மாவைப் பார்த்தான். அவள் நைந்து போன சேலைத் தலைப்பில் பிரிந்திருந்த நூலை முறுக்கிவிட்டபடி பேசாமலிருந்தாள்.

ஏதோ நடக்கக் கூடாத அசம்பாவிதம் நடந்துவிட்ட மாதிரி ஓர் அழுத்தமான மௌனம் அங்கே குடி கொண்டிருந்தது.

வரதன் தள்ளாடியபடி பேசினான். "இதப் பாரு புள்ளே... எசமானருக்கு ரொம்ப இளகின மனசு. மீனவை வளத்ததுக்குக் கூலியா நூறு ரூபா தந்திருக்காரு. வேறெ ஒரு செவலைக்கன்னும் இனமா தந்திட்டாரு. மீனவையும் குட்டியையும் இப்பவே புடிச்சுக் கொடுத்திடப் போறேன்..."

பாவாயி இடி இறங்கியது போல் துடித்தாள்.

'மீனவைப் பிரிய வேண்டிவரும்... ஆனா... இப்பவேவா... அதுவும் இப்படியா...? ரெண்டாவது செனைக்குத்தானே மாட்டைப் புடிச்சுக்கிட்டுப் போவாங்க... இதென்ன புது கூத்து? எம்புருஷனுக்கு அதுக்குள்ளே என்ன அவசரம்? ஒரு வருஷம் கறந்தா எவ்வளோ காசு மிஞ்சும்...? என்னென்லாம் வாங்கலாம்... சொத்தைக் காசு நூறு ரூபாயெ வாங்கிட்டு வந்து மீனவையும் குட்டியையும் புடிச்சுக் கொடுக்கப் போறானுமே? வெண்ணெய் திரண்டு வர்ற நேரத்திலே தாழியைப் போட்டு ஒடைக்கப் பாக்கறானே...! புது கன்னுக்குட்டி இனமா வந்திருக்காம்... ஹூம்... இது வளந்து, செனைப்பட்டு கன்னு போட இன்னும் மூணு நாலு வருஷமாவுமே... சே... இந்த ஆளு புத்தி இப்படி மழுங்கிப் போவும்னு நெனைக்கவே இல்லை...' — அவளால் மனத்துக்குள் தான் புலம்ப முடிந்தது. வாயாரச் சொன்னால் உடம்பு வீங்கிவிடுமே. ஏமாற்றப்பட்டதை அறிந்து அவள் விழிகள் அருவியாய்க் கொட்டின.

"என் உசிரைக் குடுத்து வளத்தேனே... இதுக்குத்தானா? சீம்பால் கட்டி, பால், மோர் கூழ் எதுவுமே கெடைக்காதா? செருப்பும் வாங்க முடியாதா...?" — என செவத்தானும் குமுறி அழுதான்.

வரதன் எந்தக் குழப்பமும் இல்லாமல் மீனவையும் குட்டியையும் பிடித்து முதலாளியிடம் ஒப்படைத்து விட்டுப் போதையைப் புதுப்பித்துக் கொள்ளத் துரிதமாய் நடையைக் கட்டினான்.

அந்தி கருக — காகங்கள் கலைந்து கரைந்து கத்தின.



கணவன்: இந்த ஃபேனிலிருந்து வர்ற காற்று, குளுமையாவே இல்லையே...?

மனைவி: அது எங்க அப்பா கஷ்டப்பட்டு வாங்கித் தந்ததுங்க... பெருமூச்சுக் காற்று உஷ்ணமாத்தானே இருக்கும்!

— சுரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா.




# அத்தியாயம் 51

## சுழிக் காற்று

காற்று அசையவில்லை; கடல் ஆடவில்லை; கப்பலும் நகரவில்லை.

அலையற்ற அமைதியான ஏரியைப் போல் காணப்பட்ட கடலை நோக்கிய வண்ணம் வந்தியத்தேவன் சிறிது நேரம் சும்மாயிருந்தான். அவன் உள்ளத்தில் மட்டும் பேரலைகள் எழுந்து விழுந்தன.

திடீரென்று இருகரங்களையும் கடலை நோக்கி நீட்டிக் கொண்டு 'ஓம் ஹ்ரீம் ஹ்ராம் வஷட்!'' என்று கூவினான்.

மறுகணத்தில் கையில் கத்தியை எடுத்துக் கொண்டான். சக்ராகாரமாக இரண்டு தடவை சுழற்றினான்.

''ஆம் ஆம்! சமுத்திரராஜன் பலி கேட்கிறான்! இரட்டைப் பலி கேட்கிறான். தூங்குகிறவர்களைத் தாக்கிக் கொல்லும் இரண்டு சூரர்களைப் பலியாகக் கொடு என்று கேட்கிறான்! பலி கொடுத்தால்தான் மேலே இந்த மரக்கலத்தைப் போக விடுவேன் என்கிறான். எங்கே! உடனே இப்படி இரண்டு பேரும் வந்து தலையை நீட்டுங்கள்! சீக்கிரம்! சீக்கிரம்!'' என்று ஆர்ப்பரித்தான்.

ரவிதாஸன் வந்தியத்தேவனை வியப்புடன் உற்றுப் பார்த்தான். 'ஹா! ஹா! ஹா!'' என்று மறுபடியும் பேய் சிரிப்பது போல் சிரித்தான்!

''தம்பி! இது என்ன விளை

அமரர் கல்கி

யாட்டு?'' என்றான்.

''அண்ணன்மார்களே! இது விளையாட்டு அல்ல; வினை! சற்று முன் நான் கீழே கட்டப்பட்டுக் கிடந்த போது சிறிது தூங்கிப் போனேன். அப்போது கனவு கண்டேன். கடலையும் வானத்தையும் ஒன்று சேர்த்த பூதம் போன்ற நீல நிற உருவம் ஒன்று என் முன்னால் நின்றது. ஏதோ சொல்லியது. அது என்னவென்று அப்போது புரியவில்லை; இப்போது புரிந்தது! மந்திர தந்திரங்களில் தேர்ந்த காளி பக்தர்கள் இரண்டு பேருடைய உயிர்ப் பலி வேண்டும் என்று சமுத்திர ராஜன் கோருகிறான். கொடுக்காவிட்டால் இந்தக் கப்பலை மேலே போக விட முடியாது என்றும் சொல்லுகிறான். ஆறு முரட்டு அராபியர்களின் உயிர்ப் பலியினால் அவன் திருப்தி அடையவில்லை. வாருங்கள்! சீக்கிரம்!'' என்று கூறி வந்தியத்தேவன் கையிற் பிடித்த கத்தியை வானை நோக்கி உயர்த்தினான்.

ரவிதாஸனும் தேவராளனும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக்கொண்டார்கள்.

ரவிதாஸன், ''தம்பி! கதை கட்டுவதில் உன்னைப் போன்ற கெட்டிக்காரனை நான் பார்த்ததேயில்லை!'' என்றான்.

வந்தியத்தேவன், ''ஓ! நான் சொல்வதில் உங்களுக்கு நம்பிக்கை இல்லையா? கதை கட்டுகிறேனா? சமுத்திர ராஜனே! இந்த மூடர்களுக்கு நீயே மறுமொழி சொல்!'' என்று கூவினான்.

அவன் அவ்வாறு கூவிய குரல் சமுத்திரராஜனுடைய காதிலே கேட்டது போலும். அதற்கு மறுமொழி கூறவும் சமுத்திரராஜன் விரும்பினான் போலும்.

கடலில் அப்போது ஒரு விந்தையான காட்சி தென்பட்டது. கண்ணுக்கெட்டிய தூரம் நாலு திசையிலும் கடல் ஒரு சிலிர்ப்புச் சிலிர்த்தது. சிறிய சிறிய சிறிய சின்னஞ் சிறிய அலைகள் ஆயிரமாயிரமாயிரம் எழுந்து விழுந்தன. இது ஒரு நிமிஷ நேரந்தான். அடுத்த நிமிஷத்தில் அவ்வளவு அலைகளும் வெள்ளிய நுரையின் நுண் துளிகளாக மாறின. விரிந்து பரந்த கடற்பிரதேசமெங்கும் அந்த வெண் நுரைத் துளிகள் துள்ளி விளையாடின. விசாலமான பசும்புல் தரையில் கோடி கோடி கோடி தும்பை மலர்கள் இளங்காற்றில் உருண்டு உருண்டு உருண்டு போய்க் கொண்டிருந்தால் எப்படி இருக்கும்! அவ்வாறு இருந்தது அச்சமயம் கடலின் காட்சி!

ஆம்; இலேசான இளங்காற்று, — இனிய குளிர்ந்த காற்று, — அந்த மரக்கலத்தையும் ஒரு கணம் தழுவிக் கொண்டு அப்பால் சென்றது. கப்பல் ஒரு சிலிர்ப்புச் சிலிர்த்தது. வெப்பத்தினால் வறண்டிருந்த வந்தியத்தேவனுடைய உடலும் சிலிர்த்தது.

ரவிதாஸனும் தேவராளனும் 'ஹாஹாஹா!' என்று சிரித்தார்கள்!

''தம்பி! சமுத்திரராஜனே உன் கேள்விக்கு மறுமொழி சொல்லி விட்டான்! நாங்கள் எங்களைப் பலி கொடுக்க ஆயத்தமாக வேண்டியது தான்!'' என்றான் ரவிதாஸன்.

வந்தியத்தேவனுடைய உள்ளம் கலக்கமுற்றது. கடலில் ஏற்பட்ட அந்தச் சிலுசிலிர்ப்பும் உடனே ஏற்பட்ட மாறுதலும் அவனைத் திகைக்கச் செய்திருந்தன.

ஆகா! இது என்ன? அவ்வளவு ஆயிரமாயிரம் சிறிய அலைகளும் கோடானு கோடி கோடி வெண் நுரைத் துளிகளும் எங்கே போயின? மாயமாய்ப் போய்விட்டனவே? மறுபடியும் கடல் அமைதியுற்றுப் பச்சை நிறத் தகடு போல் காணப்படுகிறதே! சற்று முன் கண்ட காட்சி உண்மையாக நிகழ்ந்ததா? அல்லது வெறும் பிரமையா? ஒருவேளை இந்த மந்திரவாதி ரவிதாஸனின் மந்திர சக்தியாகத்தான் இருக்குமோ!

''அதோ பார்த்தாயா, தம்பி! கடல் கூறியதை வானமும் ஆமோதிக்கிறது!'' என்று ரவிதாஸன் தென் மேற்கு திசையைச் சுட்டிக் காட்டினான்.

அவன் காட்டிய திசையில், — பச்சைக் கடலும் நீல வானமும் ஒன்று சேரும் மூலையிலே, — ஒரு சின்னஞ் சிறு கரிய மேகத் துணுக்கு ஒரு

சாண் உயரம் எழுந்து நின்றது. அந்தக் கரிய மேகத் துணுக்கின் உச்சிப் பகுதி செக்கச்செவேலென்று இரத்தச் சிவப்பு வர்ணத்துடன் திகழ்ந்தது.

சாதாரண நாட்களில் இந்தத் தோற்றத்தை வந்தியத்தேவன் கவனித்திருக்கவே மாட்டான். கடலும் வானும் சேரும் மூலையில் மேகத்திரள் காணப்படுவது ஓர் ஆச்சரியமா, என்ன? இல்லைதான்! ஆயினும் அந்தச் சிறிய தோற்றமும் அந்த வேளையில் நம் கதாநாயகனுடைய மனத்தைச் சிறிது கலக்கி விட்டது.

மறுகணத்தில் வந்தியத்தேவன் சமாளித்துக் கொண்டான். 'இந்த மந்திரவாதியின் வலையில் நாம் விழுந்து விடக்கூடாது' என்று மனத்திற்குள் உறுதி செய்து கொண்டான்.

ரவிதாஸனை ஒரு தடவையும் தேவராளனை ஒரு தடவையும் விழித்துப் பார்த்து, "அப்படியானால் ஏன் தாமதம்? வாருங்கள்!" என்று சொல்லிக் கத்தியை ஓங்கி வீசினான்.

"அப்பனே! நாங்கள் பலியாவதற்கு முன்னால் எங்கள் குல தெய்வத்தைப் பிரார்த்தனை செய்ய விரும்புகிறோம். அரை நாழிகை அவகாசம் கொடு!" என்றான் ரவிதாஸன்.

"சரி! பிரார்த்தனையைச் செலுத்திவிட்டு உடனே வாருங்கள். உங்கள் தந்திர மந்திரம் ஒன்றையும் என்னிடம் காட்ட வேண்டாம். காட்டினாலும் பலிக்காது!" என்றான் வந்தியத்தேவன்.

"இதோ வந்துவிடுகிறோம். எங்களுடைய ஆயுதத்தையும் இங்கேயே போட்டு விட்டுப் போகிறோம், பார்!" என்றான் ரவிதாஸன்.

அப்படியே இருவரும் ஆயுதங்களைக் கீழே போட்டுவிட்டு அம்மரக்கலத்தின் இன்னொரு புறத்துக்குச் சென்றார்கள்.

அந்த அரை நாழிகை அச்சமயம் வந்தியத்தேவனுக்கும் தேவையாயிருந்தது. கடலிலும் வானிலும் ஏற்பட்ட தோற்றங்களினால் விளக்கமில்லாத கலக்கம் அவனுடைய உள்ளத்தில் எழுந்து அவன் உடம்பையும் சிறிது தளரச் செய்திருந்தது. அவசியம் நேர்ந்தால் ஒரே கத்தி வீச்சில் அந்தக் கிராதகர்கள் இருவரையும் தீர்த்துக் கட்ட அவன் முடிவு செய்திருந்தான். ஆனால் அதற்கு வேண்டிய பலம் தன் கையில் அச்சமயம் இருக்குமா என்ற ஐயம் ஏற்பட்டிருந்தது. ஆகையால் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு கையிலும் பூரண பலத்தை வருவித்துக் கொள்ளச் சிறிது அவகாசம் அவனுக்கு வேண்டியிருந்தது.

தென் மேற்கு மூலையில் அவன் கவனம் மறுபடியும் தற்செயலாகச் சென்றது. சற்று முன்னால் சாண் உயரம் தோன்றிய மேகத் திரள் இப்போது முழ உயரமாக வளர்ந்திருந்தது. உச்சியில் இரத்தச் சிவப்பு நிறம் சிறிது மங்கியிருந்தது.

மேகத்திரள் மேலும் மேலும் உயர்ந்து வருவதாகத் தோன்றியது.

முதல் சிலுசிலிர்ப்புடன் நின்றுவிட்டிருந்த காற்று மறுபடியும் நிதானமாக வரத் தொடங்கியது. கடலிலும் கலக்கம் காணப்பட்டது. சிறிய சிறிய அலைகள் நடனமாடத் தொடங்கியிருந்தன.

மேகத்திரள் மேலும் மேலும் வானில் உயர்ந்து வந்து கொண்டிருந்தது.

காற்றின் வேகமும் அதிகரித்து வருவதாகத் தோன்றியது. கப்பல் இலேசாக அசைய ஆரம்பித்தது.

காற்றின் ரீங்காரத்துக்கும் அலைகளின் சலசலப்புக்கும் இடையில்,—அது என்ன சத்தம்? கடலில் ஏதோ விழுந்தது போல் சத்தம் கேட்டதே!

வந்தியத்தேவன் பின் பக்கம் திரும்பிப் பார்த்தான். ரவிதாஸனையும் தேவராளனையும் காணவில்லை. அதில் அதிசயமும் இல்லை. கப்பலின் மறுபக்கத்திலே அவர்கள் இருப்பார்கள். பாய் மரங்களும் கப்பலின் மைய மேடையும் அவர்களை மறைத்திருக்கின்றன.

ஆ! இது என்ன? துடுப்புகளினால் படகு தள்ளும் சத்தம் அல்லவா கேட்கிறது?......

வந்தியத்தேவன் உடனே ஓடிச் சென்று கப்பலின் மறு பக்கத்தை அடைந்தான். அவன் அங்கே கண்ட காட்சி உண்மையில் அவனைத் திடுக்கிடச் செய்தது. அப்படி நடக்கக் கூடும் என்று அவன் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. தன்னைச் சமரசப்படுத்துவதற்காக அவர்கள் கலந்து யோசனை செய்யப் போயிருக்கிறார்கள் என்றே நினைத்தான். ஆனால் அவர்கள் கப்பலின் மறு பக்கத்தில் சேர்த்துக் கட்டியிருந்த சிறு படகை அறுத்து விட்டுக் கடலிலே இறக்கி அதில் ஏறிக் கொண்டிருந்தார்கள்! துடுப்பு வலித்துப் படகைத் தள்ளவும் ஆரம்பித்து விட்டார்கள்!

வந்தியத்தேவனைப் பார்த்ததும் ரவிதாஸன் சிரித்தான். "தம்பி! சமுத்திர ராஜனுக்குப் பலியாக எங்களுக்கு விருப்பம் இல்லை தெரிகிறதா?" என்றான்.

வந்தியத்தேவன் ஒரு நொடியில் தன் நிலையை உணர்ந்தான். அந்தப் பெரிய மரக்கலத்தில் தன்னைத் தனியாக விட்டு விட்டு அவர்கள் போகிறார்கள். கப்பல் ஓட்டும் கலையைப் பற்றி அவனுக்கு ஒன்றுமே தெரியாது. கடலில் எந்த இடத்தில் கப்பல் நிற்கிறது, எந்தத் திசையாகப் போனால் எங்கே போய்ச் சேரலாம் என்பதொன்றும் அவனுக்குத் தெரியாது. அப்படிப்பட்ட அநாதரவான நிலையில் அவனை விட்டுவிட்டு அவர்கள் போகிறார்கள்.

"பாவிகளே! என்னையும் அழைத்துக் கொண்டு போகக் கூடாதா?" என்று கேட்டான்.

"தம்பி! சமுத்திர ராஜனுக்கு ஒரு பலி கூட இல்லாமற் போகலாமா?" என்றான் ரவிதாஸன்.

படகு கப்பலை விட்டு அகன்று போய்க் கொண்டேயிருந்தது.

கடலில் குதித்துப் படகைப் போய்ப் பிடிக்கலாமா என்று வந்தியத்தேவன் ஒரு கணம் நினைத்தான். உடனே அந்த எண்ணத்தைக் கைவிட்டான். அவனுக்கோ நன்றாக நீந்தத் தெரியாது. கப்பலிலிருந்து குதிப்பதற்கே மனம் திடப்படாது. அப்படிக் குதித்துத் தட்டுத் தடுமாறிச் சென்று படகைப் பிடித்தாலும் அந்தக் கிராதகர்கள் என்ன செய்வார்களோ, என்னமோ? தன்னிடம் அவர்களுடைய இரகசியத்தை வெளியிட்டு விட்டார்கள்! தான் அவர்களுடன் ஒருநாளும் சேரப் போவதில்லையென்பதையும் தெரிந்து கொண்டார்கள். படகைப் பிடிக்கப் போகும் சமயத்தில் அவர்கள் தன்னைத் துடுப்பினால் அடித்துக் கொல்லப் பார்க்கலாம். தான் தண்ணீரில் தத்தளித்துக்கொண்டே படகில்உள்ளவர்களுடன் சண்டை போட முடியாது அல்லவா?

போகட்டும்! போய்த் தொலையட்டும்! அந்தச் சண்டாளக் கொலைகாரர்களுடன் ஒரு படகிலே இருப்பதைக் காட்டிலும் இந்தப் பெரிய கப்பலில் தன்னந்தனியாக இருப்பதே மேல்! இதற்கு முன்னால் எத்தனையோ சங்கடங்களிலிருந்து கடவுளின் கிருபையினால் தான் தப்பிப் பிழைக்கவில்லையா? இந்த அபாயத்திலிருந்து தப்புவதற்கும் கடவுள் ஏதேனும் வழி காட்டுவார்! பாவிகள் போகட்டும்!...

ஆனால் அவர்களை உயிருடன் போக விட்டது சரியா? அவர்கள் எங்கே போய்க் கரை ஏறுவார்களோ? இன்னும் என்னென்ன சூழ்ச்சிகளையும் கோர கிருத்யங்களையும் செய்வார்களோ? — கடவுள் இருக்கிறார். நாம் என்ன செய்ய முடியும்? எப்படியாவது இளவரசருடன் மறுமுறை சேர்ந்து விட்டால் போதும்! இருந்தாலும் அவர் இப்படி என்னைக் கைவிட்டிருக்கக் கூடாது! பூங்குழலியுடன் என்னையும் யானைமீது ஏற்றி அழைத்துப் போயிருக்கலாம். மறுபடியும் அவரைச் சந்திக்க நேர்ந்தால், கட்டாயம் பலமாகச் சண்டை பிடிக்க வேண்டும். "உங்கள் பழமையான சோழ குலத்தின் சிநேக தர்மம் இதுதானா?" என்று கேட்க வேண்டும். ஆனால் அப்படிக் கேட்கும் சந்தர்ப்பம் வரப் போகிறதா?... இளவரசரை மீண்டும் பார்க்கப் போகிறோமா?... ஏன் பார்க்க முடியாது? நான் இந்தச் சங்கடத்தில் அகப்பட்டுக் கொண்ட

தைச் சேநாதிபதியும் ஆழ்வார்க்கடியானும் பார்த்திருக்கிறார்கள். அவர்கள் ஏதாவது செய்யாமலா இருப்பார்கள்? இளவரசரை அவர்கள் சந்தித்திருந்தால் கட்டாயம் சொல்லியிருப்பார்கள் அல்லவா?



ப்படி வந்தியத்தேவன் யோசித்துக்கொண்டுநின்ற நேரத்தில் படகு கடலில் வெகு தூரம் போய்விட்டது என்பதைக் கவனித்தான். படகு அவ்வளவு வேகமாகச் சென்றது எப்படி? படகு மட்டும் போகவில்லை; தான் ஏறியிருந்த கப்பலும் இலேசாக அசைந்து நகர்ந்து கொண்டிருக்கிறது. அதனாலேதான் கப்பலுக்கும் படகுக்கும் அவ்வளவு சீக்கிரத்தில் அவ்வளவு தூரம் ஏற்பட்டு விட்டது! கடலில் அலைகள் பெரிதாகிக் கொண்டு வருவதையும் வந்தியத்தேவன் பார்த்தான். அதுமட்டும்தானா? இது என்ன? பட்டப்பகலில் திடீரென்று ஒரு பக்கம் இருண்டு வருகிறதே? —

தென் மேற்குத் திசையை வந்தியத்தேவன் நோக்கினான். சற்று முன்னால் முழ உயரம் தெரிந்த மேகம் அதற்குள் பிரம்மாண்டமாக வளர்ந்து படர்ந்து மேற்கு வானத்தைப் பெரும்பாலும் மறைத்து விட்டதைக் கண்டான். இன்னும் அம்மேகங்கள் திட்டுத் திட்டாகத் திரண்டு புரண்டு வானத்தில் வெகு வேகமாக மேலேறி வந்தன. அவன் பார்த்துக் கொண்டிருக்கும் போதே மேற்கு வானத்தில் பாதி தூரம் இறங்கியிருந்த சூரியனை மறைத்து விட்டன. பிறகு, மேற்குத் திசையும் தெற்குத் திசையும் மேலும் இருண்டு வந்தன. வானத்தின் கரிய மேகங்கள் கடலிலும் பிரதிபலித்துக் கடல்நீரையும் கரிய மைநிறமாகச் செய்தன. கடல் எங்கே முடிகிறது. வானம் எங்கே தொடங்குகிறது என்று கண்டுபிடிக்க முடியாமல் கடலும் வானமும் ஒரே கன்னங் கரிய இருள் நிறம் பெற்றிருந்தன.

மேகத் திரள்கள் மேலும் புரண்டு உருண்டு வந்தியத்தேவனுடைய தலைக்கு மேலே வந்தன. பிறகு கீழ்த் திசையிலும் இறங்கத் தொடங்கின.

படகு சென்ற திசையை வந்தியத்தேவன் நோக்கினான். படகு இருந்த இடமே தெரியவில்லை. அவனுடைய பார்வையின் எல்லைக்கு அப்பால் போய் விட்டது போலும்!

காற்றின் மெல்லிய ரீங்காரம் இப்போது 'ஹோ' என்ற பெரும் இரைச்சலாக மாறி விட்டது.

அத்துடன், நிமிஷத்துக்கு நிமிஷம் பெரிதாகி வந்த அலைகளின் இரைச்சலும் சேர்ந்தது.

கப்பலில் விரித்திருந்த பாய்கள் சடசடவென்று அடித்துக் கொண்டன.

மரங்களும் கட்டைகளும் ஒன்றோடொன்று உராய்ந்து ஆயிரம் குடுமிக் கதவுகளைத் திறந்து மூடும் சத்தத்தை உண்டாக்கின.

பாய்மரங்களை வந்தியத்தேவன் அண்ணாந்து பார்த்தான். அவற்றின் நிலையிலிருந்து கப்பல் ஒரு திசையாகப் போகாமல் சுழன்று சுழன்று வருகிறது என்று தெரிந்து கொண்டான்.

'சுழிக் காற்று' என்று அடிக்கடி சொன்னார்களே! அந்தச் சுழிக் காற்றுத்தான் அடிக்கப் போகிறது போலும்!

சுழிக்காற்று அடிக்கும் போது பாய்மரங்களிலிருந்து பாய்களைக் கழற்றிச் சுற்றி வைக்க வேண்டும் என்று வந்தி



யத்தேவனுடைய அறிவுக்குப் புலப்பட்டது. ஆனால் அவன் ஒருவனால் அது எப்படி முடியும்? பத்துப் பேர் சேர்ந்து செய்ய வேண்டிய காரியம் அல்லவா? பத்துப் பேர் இல்லாவிட்டாலும் நாலு பேராவது வேண்டும். ஒருவன் தனியாக என்ன செய்வது? கடவுள் விட்ட வழி விடுகிறார், கப்பல் அடைந்த கதியை அடைகிறது என்று சும்மா இருக்க வேண்டியதுதான்!

கப்பல் அடையப் போகிற கதி என்னவென்று அவனுக்குச் சீக்கிரத்திலேயே தெரிந்து போயிற்று.

அப்படியும் இப்படியும் சிறிது நேரம் அலைப்புண்டிருந்து பிறகு கடலில் முழுகிப் போக வேண்டியதுதான்! முழுகுவதற்கு முன்னால் சுக்குச் சுக்காக உடைந்து போனாலும் போகும்! கப்பலின் கதி எப்படியானாலும் தன்னுடைய கதியைப் பற்றிச் சந்தேகமில்லை!

நடுக்கடலில் மரணம்!

அந்தக் கும்பகோணத்துச் சோதிடன் இதைப் பற்றி ஒரு வார்த்தையும் சொல்லவில்லை, பார்! சோதிடனும் சோதிடன்! அவனை மறுபடி பார்க்க நேர்ந்தால்.... பைத்தியக்காரத்தனம்! அவனை மறுபடி பார்ப்பது ஏது?

திடீரென்று வந்தியத்தேவன் தோளில் கெட்டியான பொருள் ஏதோ விழுந்தது. சட, படவென்று கப்பல் முழுவதும் சிறிய



சிறிய கூழாங்கற்கள் விழுந்தன. கடலிலும் ஏராளமாக விழுந்தன. அந்தக் கூழாங்கற்கள் எப்படிப் பளிங்கு போல் பிரகாசிக்கின்றன! வானத்திலிருந்து இவை எப்படி விழுகின்றன!

இன்னும் இரண்டு மூன்று கற்கள் அவன் தலையிலும் முதுகிலும் தோள்களிலும் விழுந்தன. அவை விழுந்த இடத்தில் முதலில் வலி; பிறகு ஒரு குளிர்ச்சி. கப்பலில் விழுந்த கற்களைப் பார்த்தால், ஆ! அவை உருகிக் கரைந்துபோய்க்கொண்டிருக்கின்றனவே? — ஆம்; இது பனிக்கட்டி மழை! அதுவரை வந்தியத்தேவன் அத்தகைய மழையைப் பார்த்ததுமில்லை; அநுபவித்ததுமில்லை. மடிவதற்கு முன்னால் இந்த அற்புதத்தைப் பார்க்க முடிந்ததே என்ற குதூகலம் அவன் உள்ளத்தில் தோன்றியது.

கப்பல் தளத்தில் உட்கார்ந்து, கரைந்து கொண்டிருந்த பனிக்கட்டிக் கற்களைத் தொட்டுப் பார்த்து மகிழ்ந்தான். அப்பா! என்ன சில்லிப்பு! தொடும் போது தீயைத் தொடுவது போல் அல்லவா இருக்கிறது? ஆனால் தீ தோலைச் சுட்டுத் தீய்ப்பது போல் அது செய்யவில்லை. விரைவில் சூடு குளிர்ச்சியாகி விடுகிறது.

கல் மழை எதிர்பாராமல் வந்தது போலவே சட்டென்று நின்றது. பெய்த நேரம் அரைக்கால் நாழிகை கூட இராது.


றகு சாதாரண மழை பெய்யத் தொடங்கியது. மழை ஜலம் கப்பலில் விழுந்து சிதறி ஓடிக் கடலில் விழுந்து விடுவதை வந்தியத்தேவன் கவனித்தான். சோழ நாட்டு மரக்கலத் தச்சர்களின் கெட்டிக்காரத்தனத்தை வியந்தான். எத்தனை மழை பெய்தாலும் எத்தனை பெரிய அலைகள் மோதிக் கடல் ஜலம் கப்பலில் வந்தாலும், மீண்டும் கடலிலேயே தண்ணீர் போய் விழும்படியாக அக்கப்பல் அமைக்கப்பட்டிருந்தது. கப்பலின் கீழ்ப் பகுதி உடைந்து கடல் நீர் உள்ளே புகுந்தாலன்றி அதை மூழ்கடிக்க முடியாது!

இதைப் பார்த்ததும் அவனுக்குச் சிறிது தைரியம் உண்டாயிற்று. உடனே ஒரு நினைவு வந்தது. தன்னைக் கட்டிப் போட்டிருந்த அறைக் கதவு திறந்திருந்தால் அதன் வழியாகத் தண்ணீர் உள்ளே புகுந்து விடலாம். ஓடிப் போய்ப் பார்த்தான். அவன் நினைத்தபடி கதவு திறந்து காற்றில் அடித்துக் கொண்டிருந்தது. கதவை இறுக்கிச் சாத்தித் தாளிட்டான்.

மேலே காற்றும் மழையும் பொறுக்க முடியாமற் போனால் அந்த அறைக்குள்ளே புகுந்து கூடத் தான் கதவைத் தாளிட்டுக் கொள்ளலாம். பிறகு கடவுள் விட்ட வழி விடுகிறார் என்று நிம்மதியாக இருக்கலாம். இவ்வளவு பத்திரமான கப்பலை விட்டு அந்த முட்டாள்கள் இருவரும் படகில் ஏறிப் போய் விட்டதை நினைத்து வந்தியத்தேவன் அனுதாபப்பட்டான். ஆனால் அந்தப் படகின் அமைப்பும் விசித்திரமானதுதான். எவ்வளவு காற்று அடித்தாலும் மழை பெய்தாலும் அதை மூழ்க அடிக்க முடியாது. அப்படிப் படகு உடைந்து முழுகினாலும் பக்கத்தில் அதனோடு சேர்த்துக் கட்டியுள்ள கட்டை ஒன்று இருக்கிறது. அதைப் பிடித்துக் கொண்டு அந்தக் கொலைபாதகர்கள் தப்பிக் கரை சேர்ந்துவிடுவார்கள்! அநேகமாய்க் கோடிக் கரைக்குச் சமீபமாகப் போய்க் கரை ஏறுவார்கள்!......

கோடிக் கரையிலிருந்து வந்தியத்தேவனுடைய உள்ளம் பழையாறைக்குத் தாவியது. சக்கரவர்த்தியின் திருக்குமாரிக்குத் தனக்கு நேர்ந்த கதி எப்படித் தெரியப் போகிறது? அவள் இட்ட பணியை நிறைவேற்றும் முயற்சியிலே தான் நடுக்கடலில் முழுகியதை யார் அவளுக்குத் தெரிவிக்கப் போகிறார்கள்? கடல் தெரிவிக்குமா? காற்று சென்று சொல்லுமா? — கடவுளே! அந்த மாதரசியைச் சந்திப்பதற்கு முன்னாலேயே நான் இறந்து போயிருக்கக் கூடாதா? போர்க்களத்தில் வீர மரணம் எய்தியிருக்கக் கூடாதா? சொர்க்க பூமியைக் கண்ணால் பார்க்கச் செய்துவிட்டு உடனே அதல பாதாளத்தில் தள்ளுவது போல் அல்லவா இருக்கிறது!......

காற்றின் வேகம் அதிகமாகிக்

கொண்டிருந்தது. அலை கடலின் கொந்தளிப்பு மிகுதியாகிக் கொண்டிருந்தது. கப்பலின் பாய் மரங்கள் பேய் பிசாசுகளைப் போல் பயங்கரமான சத்தமிட்டுக் கொண்டு ஆடின.



ருள் மேலும் மேலும் கரியதாகிக் கொண்டு வந்தது. இருட்டை விடக் கரியதான இருட்டு எப்படி இருக்க முடியும்? — அப்படியும் இருக்க முடியும் என்று தோன்றியது.

திடீரென்று வானத்தில் ஒரு மின்னல் தோன்றி ஒரு மூலையிலிருந்து மறு மூலை வரை பாய்ந்தது.

அதற்குப் பிறகு தோன்றிய இருட்டு இருளைவிடக் கரியதாயிருந்தது.

மின்னலைத் தொடர்ந்து இடி முழக்கம் கேட்டது; கப்பல் அதிர்ந்தது; கடல் அதிர்ந்தது; திசைகள் அதிர்ந்தன.

இன்னொரு மின்னல் அடிவானத்தில் இருளைக் கிழித்துக் கொண்டு புறப்பட்டது. அது மேலும் மேலும் நீண்டு, கப்பும் கிளையும் விட்டுப் படர்ந்து, பற்பல ஒளிக்கோலங்கள் ஆகாசமெங்கும் போட்டு, வானையும் கடலையும் ஜோதி மயமாகச் செய்து விட்டு, அடுத்த கணத்தில் அடியோடு மறைந்தது.

இடி முழக்கம் தொடர்ந்தது. அம்மம்மா! அண்டகடாகங்கள் வெடித்து விழுகின்றன என்பதில் சந்தேகமில்லை.

மேலும் மின்னல்கள்; இடி முழக்கங்கள். "இன்னும் வானம் பிளக்கவில்லையே; இது என்ன அதிசயம்!" என்று வந்தியத்தேவன் எண்ணமிட்டானோ இல்லையோ, அந்தக் கணமே ஆகாசம் வெடித்துப் பிளந்தது.

வெடித்த பிளப்பின் வழியாகப் பிரளய வெள்ளம் பொழிந்தது.

ஆம்; அதை மழை என்றே சொல்வதற்கில்லை. வானவெளியில் ஒரு கடல் குமுறிக் கொண்டிருந்து அது திடீரென்று தோன்றிய பிளவின் வழியாகக் கொட்டுவது போலவே இருந்தது.

கடல் அலைகள் ஆவேசத் தாண்டவமாடின. மின்னல் வெளிச்சத்தில் கண்ணுக்கெட்டிய தூரம் ஆடும் மலைச் சிகரங்கள் காட்சி அளித்தன.

காற்றின் கொம்மாளம் உச்சத்தை அடைந்தது. ஆடும் மலைச் சிகரங்களை அப்படியே பெயர்த்து எடுத்து வாயு பகவான் வானவெளியில் சிதறி

எறிந்து விளையாடினர்.

வந்தியத்தேவனுடைய கப்பல் மீதும் அந்த நீர் மலைகளில் சில வந்து மோதின.

மேலேயிருந்து மழை வெள்ளம் தொபு தொபுவென்று கொட்டியது; நாலா பக்கமிருந்தும் அலைமலைகள் வந்து மோதித் தாக்கின. விரிந்த பாய் மரங்கள் மீது சுழற் காற்று தாக்கிப் படுத்திய பாட்டைச் சொல்லி முடியாது.

இவ்வளவையும் பொறுத்துக் கொண்டு அந்தச் சோழநாட்டுத் தச்சர்கள் கட்டிய அதிசய மரக்கலம் சுழன்று சுழன்று வந்து கொண்டிருந்தது.



னால் எவ்வளவு நேரந்தான் சுழன்று கொண்டிருக்க முடியும்? எவ்வளவு நேரம் அந்த மாபெரும் பூதங்களின் தாக்குதலைக் கப்பலினால் சமாளிக்க முடியும்? — முடியாது; இந்த வினாடியோ, அடுத்த வினாடியோ, கப்பல் முழுக வேண்டியதுதான். அத்துடன் வந்தியத்தேவனும் முழுக வேண்டியதுதான்.

எனினும், அந்த எண்ணம் அவனுக்கு இப்போது சோர்வை அளிக்கவில்லை. அப்படித் தனக்கு நேரப் போகும் மரணம் ஓர் அற்புதமான மரணம் என்று கருதினான்.

எழும்பிக் குதித்த அலைகளைப் போல் அவன் உள்ளமும் குதூகல தாண்டவம் ஆடத் தொடங்கியது.

காற்றின் பேரிரைச்சல், அலைகளின் பேரொலி, இடிகளின் பெருமுழக்கம் இவற்றுடனே வந்தியத்தேவனுடைய குரலும் சேர்ந்தது. "ஹா ஹா ஹா!" என்று வாய்விட்டுச் சிரித்தான்.

அந்தக் காட்சியையெல்லாம் நன்றாய்ப் பார்க்க வேண்டும் என்பதற்காகவே அவன் முன் ஜாக்கிரதையுடன் பாய் மரத்தின் அடித் தண்டுடன் சேர்த்துத் தன்னைக் கட்டிக் கொண்டிருந்தான்.

கப்பல் சுழன்றபோது பாய் மரமும் சுழன்றது; வந்தியத்தேவனும் சுழன்றான்.

இப்படி எத்தனை நேரம் கப்பலும் பாய் மரமும் வந்தியத்தேவனும் சுழன்று கொண்டிருந்தார்கள் என்று தெரியாது.

பல யுகங்களாகவும் இருக்கலாம்; சில வினாடிகளாகவும் இருக்கலாம். காலதேச வர்த்தமான உணர்ச்சிகளையெல்லாம் கடந்த அமர நிலையை வந்தியத்தேவன் அப்போது அடைந்திருந்தான்.

கா ற்றின் வேகம் சிறிது குறைவது போலத் தோன்றியது. பிரளயமாகக் கொட்டிய மழை நின்றுவிட்டது. சிறு தூறல்கள் போட்டுக் கொண்டிருந்தன.

மின்னலும் இடியும் நின்று விட்டது போலத் தோன்றியது. கடல் கன்னங்கரிய இருள் பிழம்பாகத் தோன்றியது.

வந்தியத்தேவன் சிறிது நேரத்துக்கு முன்னால் மின்னல்களின் ஒளி வீச்சைத் தாங்கமுடியாமல் கண்களைமூடிக் கொண்டிருந்தான். இடிகளின் பெருமுழக்கத்தைக் கேட்க முடியாமல் காதுகளைத் தன் கைகளினால் இறுக்கிப் பொத்திக் கொண்டிருந்தான்.

இப்போது கண்களைத் திறந்து பார்த்தான்; கைகளை அகற்றிக் காதுகளையும் திறந்து விட்டான்.

ஆகா! இவ்வளவு பெரிய சுழிக் காற்று விபத்திலிருந்து நான் தப்பித்துக் கொண்டேனா! கடவுள் காப்பாற்றி விட்டாரா? மீண்டும் பழையாறை அரசிளங்குமரியை இந்த ஜன்மத்தில் காணப் போகிறேனா? இளவரசரைச் சந்தித்து அளவளாவப் போகிறேனா?......

அதற்குள் அவசரப்படக் கூடாது. இந்தக் கப்பல் இப்போது எங்கே இருக்கிறதோ, யார் கண்டது? இது பத்திரமாய்க் கரை சேரும் என்று எப்படிச் சொல்ல முடியும்? கப்பல் தப்பினாலும் நான் உயிரோடு தப்பிக் கரையேறுவேன் என்பது என்ன நிச்சயம்?

இன்னும் எத்தனை எத்தனை அபாயங்கள் இருக்கின்றனவோ?......

# மாதம் ஒரு மாவட்டம்

**கல்கி ஏற்கும் சமுதாயப் பணி**

**மீண்டும் பசும்பொன், செங்கல்பட்டு மாவட்டங்களுக்கு வருகிறோம்!**

**கடந்த ஆண்டு ஆகஸ்ட், செப்டம்பர் மாதக் கல்கி இதழ்களில் பசும்பொன் முத்துராமலிங்கம் மற்றும் செங்கல்பட்டு மாவட்டப் பிரச்னைகள் பற்றி எழுதியிருந்தோம். கூடவே, அந்தந்த மாவட்டக் கலெக்டர் பேட்டியையும் விரிவாக வெளியிட்டிருந்தோம்.**

**இப்போது அந்தப் பிரச்னைகளெல்லாம் எந்த அளவுக்குத் தீர்க்கப்பட்டிருக்கின்றன? அல்லது தீர்வு காணப்படாமல் உள்ளன? காணப்பட்ட தீர்வுகளையும் எழுதுங்கள். இன்னும் தீர்வு காணப்படாத பிரச்னைகளையும் எழுதுங்கள்.**

**மறுபடியும் நமது நிருபர்கள் வரும் ஏப்ரல் மாதத்தில் இந்த இரண்டு மாவட்டங்களிலும் ரீ—விசிட் செய்ய வருகிறார்கள்.**
**கடிதங்கள் வந்து சேர வேண்டிய கடைசித் தேதி: 20.3.88.**
**உடனடியாக எழுதியனுப்புங்கள்.**

**— ஆசிரியர்.**



வந்தியத்தேவனுடைய மனத்தில் இந்தக் கேள்வி எழுந்ததும் அதற்குப் பதில்சொல்வது போல வானத்தைக் கீறிக்கொண்டு ஒரு மின்னல் மின்னியது. அதன் பிரகாசம் அவன் கண்ணெதிரே நூறு சூரியனைக் கொண்டு வந்து நிறுத்தியது போலிருந்தது. இருட்டிலாவது கொஞ்சம் பார்க்கலாம்; அந்தப் பயங்கரப் பிரகாசத்தில் ஒன்றுமே பார்க்க முடியவில்லை. தன் கண்களையே அம்மின்னல் பறித்து விட்டதோ என்று வந்தியத்தேவன் அஞ்சினான். எரிச்சல் எடுத்த கண்களை இறுக்கி மூடிக் கொண்டான். அந்தக் கணத்திலேயே அவன் செவிகளுக்கும் ஆபத்து வந்து விட்டது. எத்தனை இடிமுழக்கங்களை வந்தியத்தேவன் முன்னம் கேட்டிருக்கிறான்; இன்றைக்கும் எத்தனையோ கேட்டான். ஆனால் இப்போது இடித்த இடியைப் போல்—சே! அது இடியா? இந்திரனுடைய வஜ்ராயுதம் அவனுடைய காதின் வழியாகப் பிரவேசித்து மண்டைக்குள்ளேயே நுழைந்து தாக்கியது போலிருந்தது.

சற்று நேரம் வந்தியத்தேவன் கண்களையும் திறக்க முடியவில்லை. காதிலோ 'ஓய்' என்ற சத்தம் கேட்டுக் கொண்டிருந்தது.

மூடியிருந்த கண்கள் ஏதோ சமீபத்தில் தலைக்கு மேலே புதிய வெளிச்சம் பரவியிருப்பதை உணர்ந்தன.

காதிலும் 'ஓய்' சத்தத்துக்கு மத்தியில் வேறொரு விநோத சப்தம் கேட்டது. காட்டில் தீப்பற்றி எரியும் போது, மரங்களில் தீப்பிடிக்கும் போது, உண்டாகும் சப்தத்தைப் போல் தொனித்தது.

வந்தியத்தேவன் கண்ணைத் திறந்து பார்த்தான். அவன் இருந்த கப்பலின் பாய் மரம் உச்சியில் தீப்பற்றி எரிவதைக் கண்டான்.

ஆகா! இப்போது புரிகிறது! அந்த மின்னல் ஏன் அவ்வளவு பிரகாசமாயிருந்தது. அந்த இடி ஏன் அவ்வளவு சத்தமாக ஒலித்தது என்று இப்போது விளங்குகிறது.

அந்தக் கப்பல் மேலேயோ, அல்லது, வெகு சமீபத்திலேயோ இடி விழுந்திருக்கிறது! அதனால் பாய்மரத்தில் தீப்பிடித்திருக்கிறது!

பஞ்ச பூதங்களில் இரண்டு பூதங்கள் அந்தச் சோழ நாட்டு மரக்கலத்தைத் தாக்கி அழிக்கப் பார்த்தன. நீரும் காற்றும் தோல்வியுற்றன. வருணனும் வாயுவும் சாதிக்க முடியாத காரியத்தைச் சாதிக்க இப்போது அக்கினி பகவான் தோன்றியிருக்கிறார்!

(தொடரும்)

பீமா சந்தேஷ்

ஆய்ந்து நுகர்வோரின் தேர்வு

# ஏற்கனவே

# மலிவான பீமா ஸந்தேஷ் திட்டம் இன்னும் மலிவாகிறது 10% முதல் 27% வரை பிரீமியக் குறைப்பு

**மிகக் குறைந்த பிரீமியம்***

பீமா ஸந்தேஷ் திட்டம் ஏற்கனவே குறைந்த பிரீமியத்திலும் எல்லோரையும் கவர்ந்துள்ளது. இப்பொழுது பிரீமியம் மேலும் குறைக்கப்பட்டுள்ளது. வயதையும் காலவரையறையையும் பொறுத்து 10% முதல் 27% வரை பிரீமியம் குறைக்கப்பட்டுள்ளது. இக்குறைப்பினால் பீமா ஸந்தேஷ் ஆயுள் காப்பு திட்டத்தில் இப்பொழுது பலரும் சேர முடியும். குறிப்பாக பொருளாதாரத்தில் பின் தங்கியவர்களுக்கு இத்திட்டம் குறைந்த பிரீமியத்தில் அதிக ஆயுள் காப்பு அளிக்கிறது

**தற்பொழுது அமலில் உள்ள பீமா ஸந்தேஷ் பாலிஸிதாரர்களும் லாபமடைகிறார்கள்**

பீமா ஸந்தேஷ் திட்டத்தில் இப்பொழுது இருக்கும் பாலிஸிதாரர்களுக்கும் புதிய பிரீமியவிகிதப்படி காப்பு தொகை அதிகம் கிடைக்கும். பீமா ஸந்தேஷ் பாலிஸிதாரர்கள் ஒவ்வொருவருக்கும் இத்தகவல் தனித்தனியாகத் தெரிவிக்கப்படும்.

**நஷ்டமற்ற திட்டம்**

பீமா ஸந்தேஷ் திட்டத்தின்படி குறிப்பிட்ட காலவரை முடிந்தபின், பாலிஸிதாரர்கள், செலுத்திய அனைத்து பிரீமியத்தையும் திரும்பப் பெறுகிறார்கள். ஒரு காலவரைக்குள் மரணம் சம்பவித்திடின் முழு காப்புத் தொகையும் அவர்களால் நியமிக்கப்பட்டவர்கள் பெறுகிறார்கள்.

உங்கள் எல் ஐ ஸி ஏஜெண்ட் அல்லது அருகாமையிலுள்ள எல் ஐ ஸி அலுவலகத்தை இன்றே அணுகுங்கள்.

**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**

எல் ஐ ஸி — மக்களின் பாதுகாப்புக் காவலன்



* மோகன்தாஸ்





* வெல்லர்

# மிகக் குறைவான வாகனங்கள்; மிக அதிகமான விபத்துக்கள்!

"உலகின் மொத்த வாகனங்களில் ஒரே ஒரு சதவிகிதம்தான் இந்தியாவில் ஓடுகின்றன. ஆனால் உலகின் சாலை விபத்துக்களில் ஆறு சதவிகிதம் இந்தியாவில்தான் நடக்கிறது!" என்று திடுக்கிட வைக்கும் ஒரு செய்தியைச்சொன்னார் பேராசிரியர் டாக்டர் வெல்லர்.

பேராசிரியர் ஜெர்மன் நாட்டைச் சேர்ந்தவர். சாலை விபத்துக்கள் தொடர்பான சிகிச்சை முறைகள் பற்றி ஒரு கருத்தரங்கு சென்னையில் நடந்தது. அதில் பங்கேற்க வந்திருந்தார் வெல்லர். கருத்தரங்குக்குத் தலைமை வகித்தவர் நமது டாக்டர், எலும்பு முறிவுச் சிகிச்சை நிபுணர், மோகன்தாஸ்.

வெல்லர் தமது நாடு பற்றியும் பேசினார்:

"எங்கள் நாட்டில் ஒவ்வொரு பதினைந்து வினாடிக்கும் ஒரு நபர் சாலை விபத்தில் அடிபடுகிறார்; இவர்களில் மூன்று பேருக்கு ஒருவர் மருத்துவமனையில் சேர்க்கப்படுகிறார். ஒவ்வொரு வருடமும் நாலு லட்சம் பேருக்கு, விபத்துக்களுக்குப் பிறகு ஆஸ்பத்திரி வாசமும், சிகிச்சையும் தரப்படுகிறது. மருத்துவமனையில் உள்ள படுக்கைகள் எண்ணிக்கையில் 40 சதவிகிதத்துக்கு மேல் இதற்காகவே தேவைப்படுகிறது! வேலை நாட்களில் 23 சதவிகிதம், விபத்துக்கள் தொடர்பான விடுமுறைகளிலேயே போய்விடுகிறது. கோர்ட் கேசுகளில் சரி பாதி, விபத்துக்கள் தொடர்பானவை!"

மறுபடி இந்தியா பற்றித் தமது கவலையைத் தெரிவித்தார் வெல்லர்:

"உங்கள் தமிழ்நாட்டுக்கு அடிக்கடி வருகிறவன் நான். இரண்டு வருடங்களுக்கு முன் இங்கே வந்தபோது, உங்கள் ஆளுனர் திரு குரானாவைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தேன். அவரது சொற்பொழிவுகள் அடங்கிய நூல் (**Towards A New Order**) ஒன்றை எனக்கு அன்புடன் தந்தார். சமூக, பொருளாதாரப் பகுதிகளோடு, சாலை விபத்துக்கள் பற்றிய அவர் கட்டுரையைப் படித்தபோது, வியப்பாய் இருந்தது. எத்தனை அக்கறையோடு, வருத்தத்தோடு எழுதியிருக்கிறார்! அவர் தந்திருக்கும் தகவல்கள் அதிர்ச்சி அளிக்கின்றன:

• 1986 — இல் மட்டும், சுமார் 40,000 பேர் சாலை விபத்துக்களில் உயிரிழந்திருக்கின்றனர்.

• பதின்மூன்று நிமிடங்களுக்கு ஒரு முறை, இந்தியாவில், சாலை விபத்தில் ஒருவர் உயிரிழக்கிறார்.

• இந்தியாவின் விபத்து எண்ணிக்கை சதவிகிதம், உலகிலேயே அதிகபட்சமானது.

• 1982 — இல், சென்னையில் மட்டும் 376 சாலை விபத்துக்கள் ஏற்பட்டிருக்கின்றன. இதில் 112 மரணங்கள் ஸ்தலத்திலேயே; 90 பேர் மருத்துவமனைக்குச் செல்லும் வழியில் இறந்துவிட்டனர்; 102 பேர் மருத்துவமனையில் மரணம் அடைந்திருக்கின்றனர்.''

வெல்லர் சில யோசனைகளையும் கூறினார்:

''இம்மாதிரி விபத்துக்கள் நேரக் காரணம் வாகன ஓட்டிகள், பாதசாரிகள் ஆகியோர் சாலை விதிகளை அறியாதிருப்பதும், அறிந்திருந்தாலும் அலட்சியப்படுத்துவதும் தான். வாகனங்களின் குறைகளும் களையப் பட வேண்டும். பல வாகனங்கள் சாலையில் ஓடவே லாயக்கற்றவை. சாலைகளை அபிவிருத்தி செய்வதும் அவசியம்.

''பயங்கரமாக அடிபட்ட நபருக்கு உடனடிச் சிகிச்சை அளிப்பதே மரணத்தின் பிடியிலிருந்து அவரை மீட்க உதவும். இதற்கு அடிபட்ட நபர் ஆஸ்பத்திரிக்கு வந்து சேரும் வரை காத்திராமல், உடனடி சிகிச்சைகளில் தேர்ந்த மருத்துவர்கள், ஆம்புலன்ஸில் தலத்துக்கே விரைய வேண்டும். தலத்திலேயே இயன்ற அளவு சிகிச்சை தந்து, பிறகு அடிபட்டவருடன் டாக்டரும் ஆம்புலன்ஸ் ஏறி, மருத்துவமனை திரும்ப வேண்டும். மருத்துவமனையில் நரம்புச் சிகிச்சை, சிறுநீரகச் சிகிச்சை, மார்புப் பகுதிச் சிகிச்சை, என்று தேர்ந்த மருத்துவர்கள், விபத்துச் சிகிச்சையளிக்கும் மருத்துவருடன் தயாராக இருப்பது அவசியம். மயக்க மருந்து அளிக்கும் அனஸ்தடிஸ்ட்டும் தயார் நிலையில் இருக்க வேண்டும்.''

வெல்லர் சொல்வதைக் கேட்க சுவாரஸ்யமாகத்தான் இருந்தது. இங்கு அப்படியெல்லாம் நடக்குமா? ஒரு மகாநாடு கூட்டும் அளவுக்கு இதில் கவனம் திரும்பியிருக்கிறதே, அதனால் நடக்கக் கூடும் என்று நம்புவோம்!

— சாருகேசி

## அருள் வாக்கு

ப்ரியம் என்று சொல்லிக் கொண்டு மாணவனை ரொம்பவும் செல்லம் கொடுத்துக் குட்டிச்சுவராக்கிவிடக் கூடாது என்பதுதான் பொதுக்கொள்கை. அதற்காகத்தான் வீட்டிலேயே படிப்பதென்றில்லாமல் குருகுலத்தில் சேர்த்தது. சிஷ்யன் ஸ்வயேச்சைப்படிப் போகவிடாமல் அவனை ஆசார்யரின் வார்த்தைப்படியே நடக்குமாறுதான் சாஸ்திரம் கட்டுப்படுத்துகிறது. இதனால் ஆசார்யர் எப்போதும் உர்ரென்று மிரட்டி உருட்டிக் கொண்டிருக்க வேண்டுமென்று ஓர் இடத்தில் கூடச் சொல்லவில்லை. ப்ரியத்தோடு நடத்தும்போதே பையன் ஸ்வாதீனமாகப் போகாதபடியும் அவனை ஒழுங்குபடுத்த வேண்டுமென்பதே சாஸ்திரக் கருத்து. உபநிஷத்துக்களில் ஆரம்பித்துப் புராண இதிஹாசங்களைப் பார்த்தால் குரு—சிஷ்யான் பரஸ்பரம் ஆழ்ந்த ப்ரியத்திலேயே கட்டுப்பட்டிருந்ததற்கு நிறைய த்ருஷ்டாந்தம் கிடைக்கும்.

மதுரமாகப் பேசியும் ப்ரியமாக நடத்தியுமே சிஷ்யனை முன்னேற்றப் பார்ப்பது தான் வழி என்று சொல்லியிருக்கிறது. ''ஸௌம்யா!'' என்று சிஷ்யனைக் குளிரக் குளிரக் கூப்பிடுவதிலிருந்து இந்த மாதுர்யம் தெரிகிறது.



சிஷ்யனை அடிக்காமலே சிக்ஷை சொல்லித் தரவேண்டும் என்று கௌதம ஸ்ம்ருதியில் இருக்கிறது. சிக்ஷை தருவது என்றாலே தண்டனை தருவது என்று பிற்பட்டு அர்த்தம் ஏற்பட்டிருந்தாலும் ஆதியில் போட்டனால் இப்படித்தான் இருக்கிறது.

ஆனாலும் தவிர்க்க முடியாமல் சில சமயங்களில் அடிக்கவும் வேண்டியிருக்கலாம். அதனால்தான் ''அடியாத மாடு படியாது.'' ''அடி உதவுகிற மாதிரி அண்ணன் தம்பி உதவுகிறதில்லை'' என்றெல்லாம் வசனம் இருக்கிறது. "Spare the rod and spoil the child" (பிரப்பம்பழம் போடாவிட்டால் பிள்ளை குட்டிச்சுவர் தான்!) என்று வெள்ளைக்காரர்களும் சொல்கிறார்கள்.

இம்மாதிரி அடிக்கும்படியாக நிர்ப்பந்தம் ஏற்பட்டால்கூட, சின்னதாக ஒரு கயிறு அல்லது மூங்கில் சிம்பால் தட்டலாமேயொழிய சவுக்கு, புளியங்கொம்புகளால் வீறுவது என்று கூடாது என்று மனு ஸ்ம்ருதி சொல்கிறது. முதுகில் மட்டும் அடிக்கலாம், வேறே எங்கேயும் அடிக்கப் படாது: தலையில் ஒருகாலும் அடிக்கப் படாது என்று கட்டுப்பாடு செய்திருக்கிறது. தலையில் அடித்தால் பொறி கலங்கி விடக்கூடும் அல்லவா?

இப்படி ஒவ்வொரு சின்ன விஷயத்தையும் சாஸ்திரங்கள் கூர்மையாகக் கவனித்துப் பயனுள்ள உபதேசங்களைத் தந்திருக்கின்றன.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

மாதுங்கா ரயில் நிலேயத்தில் அப்போதும் கன்னியாக இருந்த புது மனைவியுடன் வந்திறங்கினான் கதிரேசன். கண்டாங்கிச் சேலை, செவ்வந்திப் பூ, தோசைக்கல் அகலக் குங்குமப் பொட்டு, மையிட்ட பெரிய விழிகள், தேக்கு கடைந்த உடல், அண்டக் கறுப்பு நிறம் என்று அசல் திருநெல்வேலி பட்டிக்காட்டுவாசியாகவே இருந்தாள், அவள். ரயில் நிலையத்தின் விரிவையும் பரபரப்பையும் பார்த்து அவள் பிரமித்து வாயைத் திறந்தபடி நிற்க, அதைத் தனக்குக் கிடைக்கும் பாராட்டாகக் கதிரேசன் எடுத்துக் கொண்டான்.

"எங்க பாக்கிய? அன்னுறந்து நின்னேன்னு அக்கணுங்கயித்த உருவிட்டுப் போயிடுவானுவ! ஜகஜ்ஜாலிப் பொரட்டனுங்க. சீக்கிரம் பையை எடுத்துக்க" என்று கம்பீரமாய்ச் சொன்னான்.

தகரப் பெட்டியை அவனும் பிளாஸ்டிக் பையை அவளும் எடுத்துக் கொண்டார்கள். நகரத்தின் சாலை நெரிசலுக்கு வந்தபோது அன்னலட்சுமி பயந்து போன பசு மாட்டைப் போல் அல்லாடினாள்.

"ஏம் பயந்து சாகிறே...?"

"கூட்டமா இருக்கு."

"சிற்றி பின்ன எப்படி இருக்குமாம். கையைப் புடிச்சுக்க. பயப்படாதே! நான் இருக்கேன்ல?"

பயந்தவளாய், தன் பின் பக்கம் பதுங்கித் தன் புஜத்தைப் பிடித்தபடி அவள் வருவது அவனுக்கு மிகுந்த தெம்பை அளித்தது. ஒரு காவல் வீரனாகவும் நகரத்தின் நெளிவு சுளிவுகள் முழுக்கத் தெரிந்தவனாகவும் தன்னைப் பற்றி நினைத்துக் கொண்டான்.

பஸ் கூட்டம் நெரித்தபடி தொங்க வந்தது. "அடுத்த பஸ்ஸிலே போயிக்கிடலாமே?" என்றாள் அவள்.

"அசடு. இங்க எல்லா வண்டிலேயும் இம்புட்டுக் கூட்டம் இருக்கும். ஏறு. நான் புடிச்சு உடறேன்."

கூட்டத்தில் நெருக்கியடித்து ஏறிக் கொண்டார்கள். அவள் ஸ்பரிசம் அவனுக்குப் புல்லரித்தது. அவளை அவன் இன்னமும் சரியாகத் தொட்டே பார்க்கவில்லை.

பத்து நாட்கள் லீவில் கல்யாணத்திற்குப் போனவன் அவன். கல்யாணம் நடந்த அன்று இரவு முதலிரவு வைக்கக் கூடாது என்று அவள் வீட்டு வழக்கமாம். மறுநாள் வீட்டுக்கு விலக்காகி விட்டாள்! மூன்று நாட்கள் முடிவதற்குள் லீவு தீர்ந்து வேலையில் சேரும் நாள் நெருங்கிவிட்டது. அவளைக் கூட்டிக் கொண்டு வரும்படி ஆகிவிட்டது.

கல்யாணம் செய்து கொள்ளும் யோசனையை அவனுக்குத் தந்ததே மாதவன்தான். அவன் தாராவியில் பெட்டிக் கடை வைத்திருந்தான். கதிரேசன் மொரார்ஜி மில்லில் மிஷின்மேன். அவர்களை மாதிரி இருபது பேர் அந்த நீளமான அறையை வாடகைக்கு அமர்த்தி, சேர்ந்து சிரமங்களைப் பங்கிட்டுக் கொண்டிருந்தார்கள். வத்திப் பெட்டியில் குச்சி அடுக்குவது போல் ராத்தூக்கம். ஓட்டலின் கல்மண் சோறும் புளித்த குழம்பும் உணவு. வாரம் ஒரு சினிமா, ஆகவாசம் என்று வாழ்க்கை.

மாதவன் சொன்னான்: "என்ன மக்கா, ஒரு கல்யாணம் கட்டிக்கிடப்படாது? வீட்ல சொல்லிண்டே இருக்காறன்னியே."

"எங்கே? கட்டிக்கிட்டு, அவளை ஆறுமுகநேரியில் விட்டுட்டு நான் இங்க கறுக்கண்டுட்டுக் கெடக்கவா? சவத்தெ தள்ளுங்க மச்சான்."

"ஏன், இங்க கூட்டிக்கிட்டு வர்றது?"

"இங்கயா? ஒண்டிக்கிட ஒரு கூரை கெடய்க்க என்ன பாடுன்னு மச்சானுக்குத் தெரியாமலா?"

"அட பாப்பாம்பில. ஒரு ரூம்பு கெடய்க்காமலா போயிடும்? அட, நீ கட்டிக்கிட்டா வாரம் ஒருநாளாவது வீட்டுச் சாப்பாடு சாப்புடலாமேய்யா."

மாதவன்தான் நாலு மாசம் நாயாய், பேயாய் அலைந்து ஓர் ஒற்றை அறையை வாடகைக்குப் பிடித்து விட்டான். கதிரேசனால் அதை நம்ப அப்போதும் முடியவில்லை. பம்பாய் நகரில் வாடகைக்கு ஓர் அறை இருக்கிறது என்பது சில்லறை விஷயமா?!

தாராவியை அடைந்ததும் அன்னம் சற்றுத் தெளிந்தாள். "நம்மூரு போலவே இருக்கே" என்றாள்.

"நம்மூரேதான். எல்லாம் தமிழ் ஆளுங்க. தினத்தந்தி கூடக் கெடைக்கும். வேணுமா?"

"அய்யோ வேணும்."

"டீ குடிக்கறியா?"

ஜெயமோகன்

''வேணும். பல்லே வெளக்கலே.''

அவளுக்கு என்ன வாங்கித் தருவது என்று அவனுக்குப் புரியவில்லை. அன்பாகப், பேசுவது எப்படி என்று தெரியவில்லை. வியர்வையில் ஈரமான அவளது உடலைப் பார்த்த போது மனம் படபடத்தது.

மாதவன் கடையில் இருந்தான்.

''மக்கா கொலச்சதி நடந்து போச்சு!! மக்கா என்ன சொல்றதுக்கு'' என்றான் இவனைக் கண்டதும்.

''என்ன மச்சான்?'' என்று இவன் பதறினான்.

''செட்டு ரூம்ப நம்மளுக்குத் தர முடியாதுன்னுட்டான் பா...''

''அய்யோ....''

''நெசம்மா. அவன் மச்சான்காரன் சொன்னானும். சாலாமத்ராஸிகளுக்கு எதுக்கு ரூமைக் கொடுக்கிறேன்னு. செட்டு வாக்கு மாத்திட்டான். நாலு நாளா ஓடாத எடம் இல்லே. உனக்குத் தந்தி போட்டிருந்தேனே.''

''இல்லியே, கெடைக்கலியே.''

அவள் அசடு மாதிரி இருவரையும் மாறி மாறிப் பார்த்தாள்.

''இப்ப என்ன பண்றது? நா வேணு போயி...''

''வேணும்பா. செட்டு அதை வேறே வாடகைக்கு உட்டுட்டான்.''

''இப்படி ஆயிட்டுதே மச்சான். இவளை வச்சுண்டு இனி நான் என்ன பண்ணப் போறேன்.''

''அட பெறுக்காத கெட்ய்யா. தங்கச்சி ரெண்டு நாள் ராவுத்தர் ஊட்ல நின்னுக்கிடட்டும். ஊருக்குப் போற நம்மூர் ஆளுங்க யாராச்சும் இருக்காங்களான்னு கண்டுபிடிப்பம். தங்கச்சிய ஊருக்கு அனுப்பிட்டு ஒரு மாசத்துக்குள்ள இன்னோர் ஊடு கண்டுபிடிக்கிறது. அப்புறமா கூப்பிட்டுக்கறது. இதுக்குப் போயி அழுதுண்டு... சே...''

''ராவுத்தர் சம்மதிப்பாரா?''

''வா, நான் சொல்றேன் . அவர் கிட்ட...''

ராவுத்தர் சம்மதித்தார். அவளிடம், ''நீ உள்ளே போ அம்மிணி. சவுரியமா உன் வீடு மாதிரி நெனச்சுக்க. வேத்துமையே வேணும். குளி. டிபன் சாப்டு. ஆயிஷா! அம்மிணிக்கு என்ன வேணும்னு கேளு.'' என்று கனிவாகச் சொன்னார்.

அவருடையதும் ஒற்றை அறை வீடுதான். அதில் ஏழு பேர் வசித்தனர். ராவுத்தரின் பெண்ணுக்குக் கல்யாணமாகி அவளும் அதற்குள்தான் வாசம். அவர்களைத் தனியாக அழைத்து ராவுத்தர் சொன்னார். ''யய்யா, தம்பிகளா. ஆபத்துக்கு ஒதவணுமேன்னுதான் சம்மதிச்சேன். மூணு நாளு மூணு நாள். பாத்துக்கிடுதேன். அதுக்கு மேல...''

''இல்லய்யா, நாங்க அதுக்குள்ள அவளை அனுப்பிருவோம்.''

''ஆம்பிளைப் பயக்க உள்ள ஊடு. அதான் சொல்லுதேன். தப்பா நெனச்சுக்கப் படாது.''

''இல்லேங்க. ரொம்ப உபகாரம் நீங்க பண்ணினது.''



அன்றிரவு நீண்ட அறைக்குள் புழுக்கத்தில் புரண்டு புரண்டு படுத்தபடி அவளைப் பற்றி யோசித்தான். கல்யாணமாகியும் பிரம்மசாரி. தலையைப் பிய்த்துக் கொள்ள வேண்டும் போல வந்தது.

மறுநாள் காலையில் டியூட்டிக்குப் போகும் முன் அவளைப் போய்ப் பார்த்தான். ராவுத்தரின் வீடு குழந்தை குட்டிகளால் நிறைந்திருந்தது. அவளிடம் கண்ணால் பேசி விடைபெற வேண்டியிருந்தது.

தொழிற்சாலையில் எப்படி வேலை செய்தான் என அவனுக்கே தெரியாது. கற்பனையில் நீந்தியபடி மிஷினுக்குள் கைவிடாததை அதிர்ஷ்டம் என்றுதான் சொல்ல வேண்டும்.

சாயந்திரம் தீர்மானித்தான். அவளைக் கன்னியாகவே பம்பாயை விட்டு அனுப்புவது மடமை. அவள் வீட்டாருக்கும் அதன் மூலம் ஊருக்கும் விஷயம் தெரிந்து போகும். அவன் ஆண்மையே சந்தேகத்திற்கு உள்ளாகும். அதைவிடத் தூக்கில் தொங்கலாம்.

இந்த ஊரில் கல்யாணமாகாத ஜோடிகள் இணைய ஏதாவது வழி இல்லாமலா இருக்கும்? பீச், பார்க் எல்லா இடத்திலும் அத்தகைய ஜோடிகளை அவன் பார்த்ததுண்டு. எப்படியாவது காரியத்தை முடித்துவிட வேண்டும். தயங்கினால் மானமே போய் விடும்.

அவளை அழைத்துக் கொண்டு நடக்கப் புறப்பட்டான். வாயை வாயைத் திறந்தபடி ஒவ்வொன்றும் வேடிக்கை பார்த்தாள்.

அவளைப் பார்க் உள்ளே அழைத்துச் சென்றான். மாலை நேர பார்க், தனிமைக்குச் சற்றும் உகந்த இடமல்ல என்று அப்போதுதான் புரிந்தது. எங்கே பார்த்தாலும் ஆட்கள். புதர் மறைவில் கூட ஜோடிகள். மனித அருகாமை இல்லாத இடமே இல்லை.

"என்ன தேடிட்டிருக்கிய?" என்றாள்.

"ஒக்காந்து பேசத்தான்..."

"இங்ஙன ஒக்காந்து பேசவுமே."

"ஒந்தலே, வா" என்றான். அசட்டுச் சிகாமணி என்று மனத்துக்குள் வைதான். திடீரென ஒரு பொறி பளிச்சிட்டது. ஃபாமிலி ரூம்!

நேராக ஹோட்டல் குஜராத்தில் நுழைந்தான். ஃபாமிலி ரூமை அணுகினான்.

"எம்மாம் பெரிய டீக்கடை" என்றாள் அவள். அவனுக்கு எரிச்சல் வந்தது.

ஃபாமிலி ரூமிற்குள் நுழைந்ததும் எரிச்சல் அதிகமானது. அது ரூம் அல்ல. ஒரு பெட்டி! ஒரு மேஜையும் இரண்டு நாற்காலிகளும் போடப்பட்டதும் அது நிறைந்து விட்டிருந்தது. மேஜைக்கு இப்புறம் அப்புறமாய் இருவரும் அமர்ந்தனர். தள்ளுகதவின் கீழ் பெரிய இடைவெளி. இருவர் கால்களும் இடுப்புக்குக் கீழே வெளியே தெரியும். மேஜையைத் தாண்டி இவன் அந்தப் பக்கம் போனால் தெரிந்து விடும்.

டிபனுக்குச் சொல்லி விட்டு அவன் அவள் கன்னத்தைத் தொட்டான். அவள் அட்டை போலக் குறுகியபடி, "வேணாம்!"



— பருதலம் சுகுமாரன்.

என்றாள்.

அவன் கன்னத்தில் கிள்ளினான்.

"விடுங்க யாராவது பார்ப்பாங்க."

அவன் உடலே பரபரப்படைந்தது. அவள் செவி கழுத்து என்று தடவத் தொடங்கினான்.

"விடுங்க" என்றபடி அவள் எழுந்து விலகி விட்டாள்.

"உட்காரு உட்காரு" என்று அவன் பதறினான்.

"தொடக் கூடாது!"

"ஏண்டி?"

"யாராவது பார்ப்பாங்க."

"பார்த்தால் என்னடி?"

"வேணாம்."

'பட்டிக்காடு பட்டிக்காடு' என்றான் மனத்துக்குள். "சரி உக்காந்து தொலை. தொட மாட்டேன்."

பயந்தபடி அமர்ந்தாள்.

வெளிச்சம். அதுதான் கூசுகிறாள். கொஞ்சம் இருட்டாக இருந்தால் பரவாயில்லை. சினிமா! சினிமாவிற்குப் போனால் என்ன? குறைந்த பட்சம் ஒரு முத்தமாவது தரலாம்.

நேராக புளூஸ்டார் தியேட்டருக்குப் போனார்கள்.

அவள் படத்தை ஆர்வமாய்ப் பார்த்தாள். இந்தி படம். என்ன இழவு புரிகிறது இவளுக்கு. வேறு மாதிரி எண்ணங்களே இவளுக்குக் கிடையாதா? மண் மாதிரி இருக்கிறாள்! மண்டு ஜென்மம்!

அவன் அவள் தோளைத் தொட்டுச் சேலையைத் தாழ்த்த முயன்றான்.

"வேணாங்க"

"என்னடி வேணாம்? நாயே. புருஷன் தொட்டால் தேய்ஞ்சாடி போயிடுவே? சும்மா கெட."

அதிர்ந்து போனாள். அவனையே மினுமினுவென்று பார்த்தாள்.

முகத்தை அவள் முகத்தருகே கொண்டு போனான். அவள் கண்களில் கண்ணீர் மின்னியது. அவன் வேகம் தணிந்தது.

"என்னடி?" என்றான்.

அவள் விம்மினாள்.

"என்னடி."

"எனக்கு இதெல்லாம் பழக்கமில்லிங்க. என்னை உட்டுடுங்க!"

அவன் நெகிழ்ந்து போனான். பாவம்! ஆண்களைப் பார்க்கவே கூச்சப்பட்டு வளர்ந்த கிராமத்துப் பெண்.

"சரி அழுது நாறுதே! விடு!"

என்ன செய்வது? கன்னியாக இவளை ஊருக்கு அனுப்புவதா? சே!

லாட்ஜில் ஒரு ரூம் போட்டால் என்ன? ரூபாய் நூறு எண்ணித் தரவேண்டியிருக்கும். கழுதை போகிறது. கடன் வாங்கிச் செத்தாலும் சரி. இப்படி விடக் கூடாது.

இடைவேளையில் அவளிடம் "வா போகலாம்" என்றான்.

அவன் பரபரப்பு இப்போது அவளுக்குப் புரிந்து விட்டிருந்தது. கண்கள் மினுமினுக்க அவனையே பார்த்தாள். என்ன ஏது என விசாரிக்காமல் பேசாமல் அவன் கூட வந்தாள்.

ஏழெட்டு லாட்ஜ்களில் அறை இல்லை என்றார்கள். பலர் மேலும் கீழும் பார்த்தனர். ஏனென்று அவனுக்குப் புரியவில்லை.

அந்தக் கவுண்டர் ஆசாமியும் அவனை ஏற இறங்கப் பார்த்தான். அது மிகச்சிறிய மூன்றாந்தர லாட்ஜ். ரூம் வேண்டுமா, எதற்கு, இது யார், நிஜமா மனைவியா? பொய் சொல்லாதே, என்றெல்லாம் இடக்காக விசாரித்தான். போய் விடலாமா என்று தோன்றியது. மொழி புரியாத அவள், திருதிருவென விழித்தபடி நின்றாள்.

சோபாவில் அமர்ந்திருந்த மோட்டாவான ஆசாமி எழுந்து அருகே வந்து அவனிடம் கடுமையான குரலில் "இது யார்?" என்றான் அவளைச் சுட்டிக்காட்டி. ஆசாமியின் முக அமைப்பே காட்டிக் கொடுத்து விட்டது. போலீஸ்! கதிரேசன் குலைநடுங்கிப் போனான். வார்த்தையே வரவில்லை. "ம்.... மனைவி" என்றான் திக்கித் திணறி.

"சாலா மத்ராஸி... நாயே! எதற்குடா வந்தாய் இங்கே."

"நாங்கள் வெளியூர்...."

"சீ நாயே. கையில் பெட்டி கூட இல்லாமலா வெளியூரில் இருந்து வந்தாய்?"

பொட்டில் அறைபட்டது போல இவன் நடுங்கினான். "வா ஸ்டேஷனுக்கு" என்று மோட்டா அவன் காலரைப் பிடித்துத் தள்ளினான். கதிரேசனுக்கு வார்த்தையே வரவில்லை. திக் பிரமை பிடித்துத் தடுமாறினான். மோட்டா அவனைப் பிடித்துத் தள்ளி, பிடரியில் ஒரு போடு போட்டான்.

சட்டென்று அவள் முன்னால் நகர்ந்து கையெடுத்துக் கும்பிட்டு "வைஃப் வைஃப்" என்றாள். கண்ணீர் கடகடவென்று வழிந்தது. "வைஃப் வைஃப்" என்று சொன்னபடியே ஜாக்கெட்டுக்குள் கைவிட்டுத் தாலியை வெளியே எடுத்துத் தூக்கிக் காட்டினாள்.

மோட்டா தயங்கினான்.

"யூ ஆர் ஹிஸ் வைஃப்?" என்றான்.

தாலியைத் தூக்கிக் காட்டி அழுதபடி "வைஃப் வைஃப்" என்றாள்.

மோட்டா இவனிடம் "உன் மனைவியா?" என்றான். அவன் குரலில் கடுமை இல்லை.

"ஆமாம்."

"பிறகு ஏன் இங்கே வந்தாய்?"

தடுமாறியபடி "வீட்டில் வசதி இல்லை" என்றான்.

அங்கிருந்த அத்தனை பேரும் சிரித்தார்கள்.

"அடப்பாவி. அதற்காகவா ராத்திரி மனைவியைக் கூட்டிக் கொண்டு அலைகிறாய்? எவனாவது உன்னை அடித்துப் போட்டு அவளைத் தூக்கிக் கொண்டு போனால் என்ன செய்வாய்?"

கதிரேசன் மென்று விழுங்கினான்.

"பாவம். அழுகிறாள் பார். பத்திரமாய் வீடு போய்ச் சேர். அங்கேயே எப்படியாவது அட்ஜஸ்ட் செய்து கொள்."

மோட்டாவே ஒரு டாக்ஸி பிடித்து அவர்களை ஏற்றி விட்டான்.

அவள் அவனருகே அமர்ந்திருந்தாள். அழுகை நின்று போயிருந்தது. அவனால் பேச முடியவில்லை.

"இது கெணத்துத் தண்ணிங்க. ஏன் அவசரப்படறீக?" என்றாள்.

இவளா மண்டு என்றான் மனத்துக்குள். புன்னகை வந்தது. பிறகு "இங்கிலீஷ் எல்லாம் பேசறியே" என்றான்.

"பின்னே? நானும் மூணுகிளாஸ் படிச்சிருக்கேன்."

"நல்ல சமயோசிதப் புத்திடி உனக்கு."

"அக்காங்... பின்ன உங்களை மாதிரி அசடுன்னு நெனச்சியளா?"

அட என்றான் அவன் தனக்குள். இவன் அவளை அசடு என்று நினைத்திருக்க, அவள் இவனை அசடு என்று கருதியிருக்கிறாள்!

இன்னொன்றும் அவனுக்குப் புலப்பட்டது. அவளை வெறும் உடம்பாகத்தான் — மார்பு தொடை என்று உறுப்புகளின் தொகுதியாகத்தான் இதுவரை கருதி வந்திருக்கிறான். அவள் முகத்தைப் பார்க்கக் கூட மனமில்லை. உடம்பிலேயே கண்.

அந்த உடம்பில் கருணையும் சமயோசித புத்தியும் குறும்பும் கனிவும் உள்ள ஓர் ஆத்மா இருப்பதை உணரவில்லை. அதன் நட்பும் சிச்ருஷையும், முக்கியமாக ஒரு தார்மிகப் பாதுகாப்பும், தனக்குக் கிடைத்திருப்பதை அறியவில்லை.

அவள் உடம்பை அனுபவிக்க அனுமதிச்சீட்டுதான் தாலி என நினைத்திருந்தான். அது தன் பாதுகாப்பும் கூட என இப்போது உணர்ந்தான்.

அவள் அவன் கைமேல் கைவைத்து, "ஊர்ல யார் கிட்டேயும் சொல்ல மாட்டேனுங்க. பயப்படாதீக" என்றாள். அவன் தலையசைத்தான்!



# ஏனெனில்



திருமதி ராவிற்கு அன்று வீட்டு வேலையில் தாமதமாகிவிட்டது. மதிய உணவு டிபன் காரியர் எடுத்துச் செல்பவர் வரும் நேரம், நெருங்கியது... இனிமேல்தான் சாதம் சமைக்க வேண்டும்.

அவர் ஸ்டவ்வின் மேல் குக்கரை வைத்து விட்டு. பர்னரை திறந்துவிட்டார். ஆனால் தீப்பெட்டி வைத்த இடத்தில் இல்லை. அங்கும் இங்குமாக அதைத் தேடினார்... கிடைக்க வில்லை. பிறகு புதிய தீப்பெட்டி ஒன்றை எடுத்தார்.

தாமதமாகிவிட்டதே என்ற பரபரப்பில். பர்னரை திறந்ததை மறந்துவிட்டார். காஸ் வாடையிலும் கவனம் செலுத்தவில்லை தீக்குச்சியைப் பற்ற வைத்தார்...

அவ்வளவுதான்...திருமதி ராவ் சிறிது காயங்களுடன். பெரிய விபத்துக்கு உள்ளாகாமல் தப்பிப் பிழைத்தார். ஆனால் நீங்களும் அவரைப் போன்று அதிர்ஷ்டசாலியாக இருப்பீர்கள் என்பது என்ன நிச்சயம்...

# ஜாக்கிரதை!

**இதுபோன்ற சூழ்நிலை உங்களுக்கு நிகழாதிருக்கும்படி எச்சரிக்கையாய் இருங்கள்.**



எப்போதும் தீக்குச்சியைப் பற்றவைத்த பிறகே பர்னரை திறக்க வேண்டும்.

**இண்டேனின் இரண்டு நிமிட LPG (எல்பிஜி) பாதுகாப்பு முறையைப் பின்பற்றுங்கள்:**

**அதிகாலையில் சமையலறைக்குள் போன முதல்** நிமிடம், காஸ் வாடை அடிக்கிறதா என்று பாருங்கள். அப்படி காஸ் வாடை இருந்தால், கீழே. கொடுக்கப்பட்டுள்ள முன்னெச்சரிக் கைகளைப் பின்பற்றவும். காஸ் வாடை இல்லை யெனில் நீங்கள் ரெகுலேட்டரை திருப்பலாம். அவ்வாறு திறக்கும்போது ரப்பர் ட்யூபில் எவ்வித வெடிப்பும் இல்லாது இருக்கிறதா என்று கவனிக்கவும். பர்னரை திறக்கும் முன் தீக்குச்சியைப் பற்றவைத்துப் பார்க்கவும்.

**இரவில் கடைசியாக சமையலறை லைட்டை அணைத்துவிட்டு வரும் முன்,** ரெகுலேட்டரை மூடவும். பிறகு பர்னர்கள் முழுமையாக மூடி இருக்கின்றனவா என்று உறுதி செய்து கொள்ளவும்.

**காஸ் வாடை வந்தால் உடனடியாக செய்ய வேண்டியவை.**

- ரெகுலேட்டர் மற்றும் பர்னர்களை மூடவும்.
- எல்லா திறந்த சுடர்களையும் அணைத்து விடவும்—ஊதுவத்தியைக் கூட.
- காஸ் வெளியேறும் வகையில் ஜன்னல்களையும் கதவுகளையும் திறந்துவிடவும்.
- லைட்/ஃபான் போன்றவற்றை போடவோ அணைக்கவோ கூடாது. அதனால் ஏற்படும் ஒரு சிறிய தீப்பொறிகூட பெரிய வெடி விபத்தை உண்டாக்கலாம்.
- தொடர்ந்து காஸ் வாடை இருக்குமானால், இண்டேன் விநியோகஸ்தரை உடனடியாக அழைக்கவும்.

**தினந்தோறும் பாதுகாப்பிற்காக**
**இரு நிமிடங்களை**
**ஒதுக்குங்கள்.**






Shilpi IOC 9A/88 Tam

# இக்கரை, அக்கரைக்கு பச்சை...

## 8

ஷியாம் தன் மடியில் பவ்யமாய்ப் படுத்திருந்த நாயை மெதுவாகத் தடவிக் கொடுத்துக் கொண்டே, சிகரெட் புகையை அதன் ஒரு காதின் மடலை இழுத்துப் பிடித்துக் கொண்டு காதுக்குள் ஊதினான். தலையை அவசரமாக உலுக்கிக் கொண்டது அது.

தீபக் இரண்டு கிளாஸ்களிலும் சம அளவில் அந்த வெளிநாட்டு விஸ்கியை ஊற்றி, ஐஸ் துண்டுகளை அதில் மிதக்க விட்டான். ஜன்னல் திரைகளைக் காற்று உற்சாகப்படுத்திக் கொண்டிருக்க, மரக்கிளைகள் மறைக்க முயன்ற நிலா தெரிந்து, தெரிந்து மறைந்தது.

அந்த ஹால் கச்சிதமாக இருந்தது. சுவர்களில் அழுக்கோ, எண்ணெய்ப் பிசுக்கோ இல்லை; கப்போர்டில் வரிசையாய் மண்ணெண்ணெய்க்கான க்யூ போலப் புத்தகங்கள். மினி ரெஃப்ரிஜிரேட்டர். ஸ்டாண்ட் அமைத்து அதன் மேல் டெலிவிஷன், அதன் தலையில் வீடியோ சாதனம். தரையில் லினோலியம் விரிக்கப்பட்டிருந்தது. சோபா, நாற்காலிகள், டீப்பாய். சமையலறை செல்ல ஒரு வாசல் – கதவில்லாமல். படுக்கையறை செல்ல ஒரு வாசல் – கதவுடன். கதவில் ஒரு பெண் த்ரீ–டைமென்ஷனில் விவஸ்தை இல்லாமல் எல்லோருக்கும் கண்ணடித்துக் கொண்டிருந்தாள். ஸ்டூல் மேல் டெலிபோன் டைரக்டரி. அதன் மேல் டெலிபோன்.

தீபக் ஒலித்த அதை எடுத்து, ''ஹலோ'' என்றான்.

''ஷியாம் இல்லை? யார் பேசறது?''

தீபக் ரிசீவரின் வாய்ப் பகுதியைப் பொத்திக் கொண்டு, ''ஷியாம், உங்க அப்பாடா'' என்றான்.

''நான் இல்லைன்னு சொல்லிடேன். சரி சரி. வேணாம். நானே பேசிடறேன்'' என்று வாங்கிக் கொண்டு, ''என்னப்பா? சொல்லுங்க? எங்கேர்ந்து பேசறீங்க?'' என்று கேட்டான்.

''பக்கத்து வீட்லேர்ந்துதான்ப்பா பேசறேன்.''

''சரி என்ன விஷயம்?''

''வீட்டு வரி ஏத்திட்டாங்க. அப்பீல் பண்ணி வச்சிருக்கேன்.''

''எவ்வளவு பணம் அனுப்பணும்? அதைச் சொல்லுங்க போதும்.''

''ஐந்நூறு சேர்த்து அனுப்பினாத் தேவலாம். இந்த மாசம் மட்டும்.''

''சரி. அனுப்பறேன். வச்சிடவா?''

''இருப்பா. வச்சிடாதே. வாரா வாரம் தபால் போட்டுக்கிட்டே இருக்காங்க.''

''யாரு?''

''வேற யாரு? திருநெல்வேலிக்காரங்கதான். பொண்ணு வச்சிருக்கிறவங்க அவசரப்படத்தானே செய்வாங்க.''

''என் பையனுக்கு இப்பக் கல்யாணம் செய்துக்கிறதா எண்ணம் இல்லேன்னு உங்களை எழுதிப் போடச் சொல்லிட்டேனேப்பா. இன்னும் எழுதலையா?''

''உன் சித்தப்பாகூட ஒரு கல்யாணத்தில பார்த்திருக்கானாம்ப்பா. பொண்ணு அவ்வளவு அழகா இருப்பாளாம்.''

''அப்படியா?''

''ஆமாம். நல்ல சிவப்பாம். நல்ல உயரம். படிச்சு வேற இருக்குது.''

''அப்படின்னா சித்தப்பாவையே கட்டிக்கச் சொல்லிடுங்க.''

''ஷியாம், என்ன பேச்சு இது?''

''பின்னே என்னப்பா? நான்தான் இப்ப இஷ்டமில்லேன்னு சொல்லிட்டேனே....., சும்மா ஏன் என்னைத் தொந்தரவு பண்றீங்க?''

''அதது அந்தந்த வயசுல நடக்க வேணாமா ஷியாம்? உனக்கும் முப்பத்திரண்டு வயசாச்சுப்பா. இன்னும் வயசு ஏறிச்சின்னு பொண்ணு கொடுக்கவே யோசிப்பாங்க.''

''அதுதானு உங்க கவலை? விடுங்க! நான் கல்யாணம் பண்ணிக்கிறதாவே இல்லை. ஏன், எதுக்குன்னு கேட்டுக்கிட்டே இருக்காதீங்க. பேசறது எஸ். டி. டி. யிலே. மீட்டர் ஏறிக்கிட்டே இருக்கும். வச்சிடுங்க. இது விஷயமா மறுபடி பேசாதீங்க.''

பட்டுக்கோட்டை பிரபாகர்

ஷியாம் பளிச்சென்று ரிசீவரை வைத்து விட்டு வந்து சோபாவில் அமர்ந்து ஒரே மூச்சில் தன் கிளாஸைத் தீர்த்தான்.

"போனை எடுத்தாலே கல்யாணம்னு ஆரம்பிச்சிடறார்."

"பண்ணிக்கயேன் — அவருக்காக."

"ஆமாம், அவருக்காக ஒண்ணு, உனக்காக ஒண்ணு, எனக்காக ஒண்ணுன்னு ஏழு கல்யாணம் பண்ணுவாங்கடா. நீயும் என்னைப் புரிஞ்சுக்காமப் பேசறியே. கல்யாண மாகிப் பொண்டாட்டின்னு வந்துட்டா.. அது வீட்டுக்குள்ளேயே போலீஸ் ஸ்டே ஷன் வச்சிக்கிற மாதிரிடா முட்டாள். எப்ப வும் சந்தேகப் பார்வை! சதா கேள்விகள்! ஏன் லேட்டு? யாரோட போன்ல சிரிச்சுப் பேசறீங்க? எதுக்கு இவ்வளவு சிகரெட் பிடிக்கிறீங்க? டைரில எழுதியிருக்கிற போன் நம்பர்ஸ் எல்லாம் யாருது? சட்டை பாக்கெட்ல புடைவை பில் இருந்துச்சே, புடைவை எங்கே? ஊருக்குப் போய்ட்டு வந்த பெட்டியில் என்ன அவ்வளவு நீள மான தலைமுடி? வாட்டிடும்டா கேள்விகள்! இல்லறம் முக்கியம்னு பொறுமையா சால் ஜாப்பு சொல்லணும். நம்புற மாதிரி கற் பனை சொல்லணும். கோபம் ஏறிக்கிட்டா வெளில போடின்னு சொல்லணும். பிரச்னை! என்னை, என் போக்கை நான் மாத்திக்கிறதா இல்லே. என்னால் வெற்றி கரமா இல்லறம் நடத்த முடியாது. ஒரு வண்டுக்கு ஒரு பூதான் 'கோட்டா'ன்னு சொல்ல முடியுமா? அதுமாதிரி ஷியாமைக் கட்டிப் போட முடியாது. விடு. அந்தப் பேச்சை விடு. நாம் வேற எதுவோ பேசிட் டிருந்தோமே தீபக்.."

தடவைக்கு ஐந்து மில்லி என்று நிதான மாகத் தன் கிளாஸைக் காலி செய்து கொண்டிருந்த தீபக், "நிவிதாவுக்கு இரண் டாவது திட்டம் வச்சிருக்கேன்னு சொன்னே" என்றான்.

"ஆமாம். நிவிதா எப்படிப்பட்ட பொண் ணுன்னு தெரிஞ்சிக்கிட்டாச்சு. காதலுக்கு மயங்க மாட்டா. ஏன்னா ஏற்கெனவே காத லிக்கிறா. பரிசுப் பொருள்களுக்கும் தடுமாற மாட்டா. ஏன்னா ரோஷமுள்ளவ. தன் மானம் பார்க்கிறவ. அதனால..."

"வன்முறைதான் வழின்னு முடிவுக்கு வந்துட்டியா?"

"வன்முறையா? யு மீன்... அவளைத் தனியா சந்திக்கிற சந்தர்ப்பம் அமைச்சு, சினிமா மாதிரி பலாத்காரம் பண்ணி... ரப்பிஷ்! நோ! எனக்கு அந்த மாதிரி எண் ணம் கிடையவே கிடையாது. அதிலே என்ன சுவாரசியம் இருக்கும் தீபக்? நான் உன்னை ஜெயிச்சிட்டேன் பாருங்கிற ஈகோ நிறைவு கிடைக்கலாம். ஆனா ரசிச்சு அனு பவிக்கிற வாய்ப்பு இருக்கா அதிலே?"

"பின்னே?"

"தீபக், முள்ளும் குத்திக்காம, பூவுக்கும் நோகாம பூப்பறிக்கணும். அதிலதான் சாமர்த்தியம் இருக்கு, சவால் இருக்கு! நிவிதாவை நானாகத் தொடப் போறதே இல்லே. அவளா வந்து ஷியாம், என்ன—



எடுத்துக்கங்கன்னு தரணும். தருவா.''

''தட் ஈஸ் ஹண்ட்ரட் பெர்ஸெண்ட் இம்பாஸிபிள் ஷியாம்.''

ஷியாம் சற்று எரிச்சலுற்றான். தீபக்கை அழுகின காய்கறியைப் போலப் பார்த்தான்.

''நீ என் ஃப்ரெண்டுன்னு சொல்லிக்கவே லாயக்கில்லே தீபக். என்னை அவ்வளவுதான் புரிஞ்சு வச்சிருக்கே. ஓர் அரசாங்க அதிகாரியால என் கம்பெனிக்கு ஒரு காரியம் ஆக வேண்டியிருந்துச்சு. பொட்டி நிறைய பணம் தர்றேன்னு சொன்னேன். மசியலே. பெண் சபலத்தில் ஆளைச் சாய்ச்சிடலாம்னு பார்த்தேன். முடியலே. பையனுக்கு என்ஜினியரிங் காலேஜ்ல சீட் வாங்கித் தர்றேன்னு உறுதி தந்தேன். எடுபடலே. படு நேர்மையா நடந்துக்கிட்டார். இவரை விட்டுத்தான் பிடிக்கணும்னு வந்துட்டேன். தொடர்ந்து பதினஞ்சு நாள் கண்காணிக்கச் சொன்னேன், சிக்கிக்கிட்டார்.''

''எப்படி?''

''மனுஷனுக்குப் பக்கத்து ஊர்ல ஒரு சின்ன வீடு இருக்கு. இந்தக் குடும்பத்துக்குத் தெரியாம. இவர் கார் அந்த வீட்டு வாசல்ல நிக்கிறது, உள்ள போறது, அந்தச் சின்ன வீட்டம்மா வழியனுப்புறதுன்னு பத்து போட்டோ புடிச்சேன். மறுநாள் ஆஃபீஸ்ல போய்ப் பார்த்து, எடுத்ததை எல்லாம் காட்டினேன். மறுவார்த்தை பேசாம என் ஃபைல்ல கையெழுத்துப் போட்டார். இதுதான் உண்மையான வெற்றி. இதையே கத்தியைக் காட்டி மிரட்டிக் கூட என்னால் வாங்க முடியும். அதிலே சாமர்த்தியம் கிடையாதே...''

''ஷியாம், எதுக்கு இப்ப இதையெல்லாம் சொல்றே?''

''அது மாதிரி... நிவிதாவுக்கு வலுவா ஒரு வலை பின்னப் போறேன். இதிலே உன் பங்கும் உண்டு. புரிஞ்சுதா?''

''என்னை விட்டுடுன்னு சொன்னாலும் நீ கேக்கப் போறியா? சரி. சொல்லு. நான் என்ன செய்யணும்?''

''சொல்றேன்'' என்று மற்றொரு சிகரெட் உயிர்ப்பித்துக் கொண்டான் ஷியாம்.

அடுத்த ஒரு வாரம் நிவிதாவுக்கு அலுவலகம் நெருக்கமாகிப் போனது. நோட்டீஸ் போர்டில் இருந்து யாருமே சேலையை எடுத்துக் கொள்ளாததால், அதை எடுத்துச், சொன்னபடியே ஒரு நாள் 'லஞ்ச்' நேரத்தில் ஏலம் விட்டாள். அந்தோணி, ''இந்தத் தைரியத்தைக் கடைசி வரை விடாதே'' என்றார். நாராயணன் விமலாவுக்குக் காட்டின தன் கவிதையை இவள் வாசித்து, நேரடியாகச் சென்று பாராட்டினாள். விமலாவின் அழைப்பை ஏற்று அவள் வீட்டிற்குப் போனாள். குடும்ப ஆல்பம் பார்த்து, கேரம் போர்ட் விளையாடி, சுடச்சுட பஜ்ஜி சாப்பிட்டு.. அந்த ஞாயிறு உற்சாகம் நிறைந்திருந்தது. வினோத் குமார் ஊர் போயிருந்தான். வித்யா சாகர் விடுதிக்கு வந்து கொச்சினில் ஓர் எண்ணெய் சுத்திகரிப்பு ஆலையில் இருந்து நேரடித் தேர்வுக்கு அழைப்பு வந்திருப்பதாகச் சொல்லி, போய் வரச் செலவுக்குப் பணம் வாங்கிச் சென்றான். ஷியாம் ஒரு முறை அவளைத் தன் அறைக்கு அழைத்து, ''வேற எந்தப் பிரச்னையும் மறுபடியும் இல்லேயே?'' என்று அக்கறையாய் விசாரித்து விட்டு அவள் அகன்றதும், போட்டோவுக்கு முத்தம் கொடுத்தான்.

அன்று மத்தியானம் மூன்று மணிக்கு செக்ஷன் போன் ஒலித்த போது, அந்தோணி அதை எடுத்தார். ''ஹலோ, மீரஜ் எலெக்ட்ரிகல்ஸ், அக்கவுண்ட்ஸ்'' என்றார்.

''ஆத்மா டிஸ்ட்ரிபியூட்டர்ஸ்லேர்ந்து ஹரி பேசறேன். மிஸ்டர் அந்தோணி இருக்காரா?''

''அந்தோணிதான் பேசறேன். சொல்லுங்க சார்.''

''உங்களைச் சந்திக்கணுமே நான்.''

''வாங்களேன். ஆஃபீஸ் தெரியுமில்லே?''

''உங்களை வேறே எடத்தில சந்திக்கணும் சார்.''

''புரியலேயே..''

''கொஞ்சம் பர்ஸனலாப் பேசணும். உங்க வீட்டு விலாசம் சொன்னா அங்கே வந்து சந்திக்கிறேன். இல்லேன்னா ஒரு பொது இடத்தை நீங்களே தேர்ந்தெடுங்க. அங்கே சந்திக்கலாம்.''

''என்ன விஷயமா என்னைச் சந்திக்கணும்னு சொன்னாத் தேவலே.''

''உங்களுக்கு இந்தச் சந்திப்பினால் நிச்சயமா நன்மை உண்டு. லாபம் உண்டு.''

''எதுவும் புரியலேயே மிஸ்டர்... பேரென்ன சொன்னீங்க?''

''ஹரி. என்ன சார் எதுவுமே புரியாத மாதிரிப் பேசறீங்க? ஆத்மா டிஸ்ட்ரிபியூட்டர்ஸ் மேல உங்க கம்பெனி கேஸ் போட்டிருக்கிறது கூடவா நினைவில்லே?''

''அது தெரியும். அதுக்கும் என்னைச் சந்



''நடிகை திரிஷாஸ்ரீ வீட்டு வாசல்ல பந்தல் போட்டு அலங்காரம், கலர் விளக்குகள் எல்லாம் பலமா இருக்கே, எதுவும் விசேஷமா...?''

''ஆமாம். அவங்க மூணாவது டைவர்ஸைக் கொண்டாடுறாங்க!''

— கடுவை கோபால்சாமி.



டிக்கிறதுக்கும் என்ன சம்பந்தம்? கேஸ் விஷயமா, பேசித் தீர்க்கற கட்டம் தாண்டி, கோர்ட்டுக்கு வந்தாச்சு. இப்ப எதுவும் பேசணும்னுக்கூட நீங்க ரீஜனல் மேனேஜரைத்தான் பார்க்கணும்.''

''என்ன சார் சுத்தப் புரியாத ஆளா இருக்கீங்க. இது சம்பந்தமா எங்களுக்கு ஓர் உதவி தேவைப்படுது. அதைச் செஞ்சு கொடுத்தா, அதுக்குத் தகுந்த மாதிரி நீங்க விருப்பப்படற வகையில டெலிவிஷனோ, ஹீரோ ஹோண்டாவோ இல்லே கேஷாவோ... எல்லாத்தையும் போன்லயே எப்படிச் சொல்றது? விட்டு அட்ரஸ் சொல்லுங்களேன்.''

''ஓகோ, என்னை விலை பேசறீங்களா? அதுக்கெல்லாம் வேறே ஆளைப் பாருங்க. இந்தக் கம்பெனில இருபத்தி ரெண்டு வருஷமா விசுவாசமா வேலை பார்க்கறேன். துரோக நினைப்பு கனவுலகூட வராது. வச்சிடவா?''

''இருங்க. வச்சிடாதீங்க. உங்க செக்ஷன்ல மிஸ் நிவிதான்னு...''

''ஆமாம்.''

''அவங்ககிட்டே பேசணும் — வேற விஷயமா. உங்களுக்கு இஷ்டமில்லேங்கிறப்போ விட்டுடுங்க. வற்புறுத்தலே. நிவிதாவைப் பேசச் சொல்லுங்க.''

''வெய்ட்'' என்று ரிசீவரைத் தனியாகக் கிடத்தி விட்டு, ''நிவிதா பேபி, உனக்கு போன்'' என்று விட்டு, பியூனை அழைத்து, ''ஆர். எம். இருக்காரான்னு பார்த்துட்டு வா'' என்றார்.

நிவிதா எழுந்து வந்தாள். வினோத் டூர் முடிந்து வந்திருக்க வேண்டும் என்கிற எதிர்பார்ப்புடன் ரிசீவரை எடுத்து, ''ஹலோ, நிவிதா பேசறேன்'' என்றாள்.

''மேடம், வணக்கம். என் பேர் ஹரி. என்னை உங்களுக்குத் தெரியாது. எனக்கும் உங்களை அதிகம் தெரியாது. ஆனா நீங்க பழகிக்கிட்டிருக்கிற வினோத் குமாரைப் பத்தி நிறைய தெரியும். உங்க மேல் ஒரு அக்கறை. சில அதிர்ச்சியான தகவல்களை நீங்க தாங்கிக்க வேண்டி வரும். என்னை நம்பலாம். நான் ஒரு ஜென்டில்மேன். நேர்ல சந்திச்சாத்தான் பரவாயில்லே. பகல்ல சந்திக்கலாம். பொது இடத்தில சந்திக்கலாம். எங்கேன்னு தீர்மானிச்சு இன்னைக்கே ஒரு லெட்டர் போடறேன். நாளைக்குக் காலேல உங்களுக்குக் கிடைக்கும். அதுப்படி நீங்க வர விரும்பினா வரலாம். ஆனா நான் காத்திருப்பேன் — அநியாயமா ஒரு பொண்ணோட வாழ்க்கை வீணாப்டக் கூடாதேங்கிற அக்கறையில் சொல்றேன். ப்ளீஸ் கம். வினோத் குமார் பத்தி சில ஆதாரபூர்வமான தகவல்கள் வச்சிருக்கேன். காட்டறேன். பார்த்துட்டு நம்பறதும், நம்பாததும் உங்க இஷ்டம். நாளைக்கு என் தபால் பாருங்க. தயவு செஞ்சு நம்ம சந்திப்பை ரகசியமா வச்சிக்கங்க. ஓ கே?''

குறுக்கே எதுவுமே பேசாமல் கேட்டுக் கொண்டே வந்த நிவிதாவிற்குக் குப்பென்று வியர்த்தது. யார் அவன் ஹரி? என்ன இது?

**ரூ. 1000/— பரிசு!**

**இந்தக் கதை 26 வாரங்கள் தொடரும். சுமார் 20, 22 அத்தியாயங்கள் முடிந்ததும் கதை தொடர்பாகச் சில கேள்விகள் தரப்படும். ஓரிரு வார்த்தை பதில்களை ஒரு தபால் கார்டில் நீங்கள் எழுத வேண்டியதுதான்!**

**கடைசிக் கேள்வியை இப்போதே கூறி விடுகிறோம்!: ''இந்தத் தொடரில் உங்களை மிகவும் கவர்ந்த, 'நறுக்'கென்றமைந்த நாலு வரிகள் எவை?''**

**எனவே, கவனமாகப் படித்து வருவதுடன், 'நறுக்' வரிகளை அவ்வப்போது குறித்து வைத்துக் கொள்ளவும்!**

**— ஆசிரியர்.**

என்ன தகவல்? ஆதாரபூர்வமானதா? என் வினோத்தைப் பற்றியா? நெஞ்சில் குப்பென்று ஓர் அடைப்பு. தொடர்பு துண்டிக்கப்பட்டதும் மெதுவாக ரிசீவரை வைத்த நிவிதாவையே பார்த்தார் அந்தோணி.

''யார் பேபி பேசினது? சொந்தக்காரரா?''

''ம்? இல்லே. ஆமாம்.'' என்று தடுமாறினாள்.

''ஆத்மா டிஸ்ட்ரிபியூட்டர்ஸ் ஹரி உனக்குச் சொந்தக்காரரா? அவன் என்கிட்டே ஒரு வேலையாப் பேசிட்டுத்தான் உன்னைக் கூப்பிடச் சொன்னான். தப்பா நினைக்கக் காதே. ஒரு காரணமாத்தான் கேக்கறேன். என்ன பேசினான்?''

என்ன சொல்வது என்று திகைத்த நிவிதா, ''வந்து... பர்ஸனல் சார்... ப்ளீஸ்'' என்று நடந்து தன் இருக்கையில் யோசனையாக அமர...

அந்தோணி எழுந்தார். நேராய் ஷியாம் அறைக்குள் அனுமதி பெற்றுக் கொண்டு வந்து அமர்ந்தார்.

''சார், கொஞ்சம் முன்னாடி ஆத்மா டிஸ்ட்ரிபியூட்டர்ஸ்லேர்ந்து யாரோ ஹரி என்னைக் கூப்பிட்டான். கோர்ட்டுக்குப் போய்ட்ட கேஸ் சம்பந்தமா என்னைத் தனியா சந்திக்கணுமாம், என் உதவி வேணுமாம், பணம் தர்றானாம்..''

''டாமிட்! என்ன சொன்னீங்க நீங்க?''

''அதுக்கு வேற ஆளைப் பாருப்பான்னுட்டேன். ஆத்மா டிஸ்ட்ரிபியூட்டர்ஸ் சரியான ஃப்ராடு கம்பெனி சார். நம்ம கம்பெனிக்கு மட்டும் அஞ்சரை லட்சம் வரைக்கும் பித்தலாட்டம் செஞ்சி, அக்கவுண்ட்ஸ்ல கண்டு பிடிச்சு இப்ப கேஸ்ல இருக்கு. அப்ப ஏதோ குறுக்கு வழி பிளான் செய்யறாங்க. சார், இன்னொரு விஷயம். புதுசா வந்திருக்கிற நிவிதாவோடயும் போன்ல பேசினான். சொந்தக்காரர்ன்னு நிவிதா சொன்னது மழுப்பின மாதிரி இருந்திச்சு. என்ன பேசினான்னு கேட்டதுக்குப் 'பர்ஸனல்'ன்னு சொல்லிடுச்சி. அவன் நிவிதாவை நமக்கெதிரா பயன்படுத்தலாமோன்னு நான் சந்தேகப்படறேன்.''

''நம்ம நிவிதாவையா?'' என்று ஆச்சரியப் பட்டான் ஷியாம் — கூடுதலாக.

(தொடரும்)




விஷயத்தில் அது வெற்றியாக அமையவும் முடியும் என்று நிரூபித்தவர் சகஸ்ரநாமம். பாரதியின் 'பாஞ்சாலி சபதம்' அவருடைய ஆற்றலால் ரசிகர்கள் ஒவ்வொருவரையும் மெய்சிலிர்க்க வைத்தது.

பி. எஸ். ராமையா, தி. ஜானகிராமன் போன்றவர்களை, நாவல்கள், சிறுகதைகளோடு நாடகமும் எழுதும்படி செய்தவர் சகஸ்ரநாமம்தான். 'பிரஸிடெண்ட் பஞ்சாட்சரம்;' 'வடிவேலு வாத்தியார்' போன்றவை நாடக இலக்கியங்கள் மட்டுமல்ல, நாடகங்களுக்கு இலக்கணம் வகுத்தவை.

அண்மையில், கோர்பசேவ் — ரேகன் ஆயுதக் குறைப்பு ஒப்பந்தம் ஏற்பட்டதல்லவா? இந்த ஆயுதக் குறைப்பையும் உலக அமைதியையும் அடிநாதமாகக் கொண்டு அன்றைக்கே குறுநாவல் எழுதியவர்

# நடிப்பை நிஜமாக்கியவர்!

'நாடகம் என்ற சொல், நாடு + அகம் என்பதாகப் பொருள்படப் பிரியும். எனவே நமது நாட்டின் பண்பாட்டினை மீறி நாடகம் அமையவே கூடாது' என்று கூறுவார் டி. கே. சண்முகம். இந்த மரபு மீறாமல் நாடகம் நடத்தி வந்தவர்களில் ஒருவர் எஸ். வி. சகஸ்ரநாமம்.

அவருடைய நாடகக் குழுவின் பெயரே 'சேவா ஸ்டேஜ்'. சிறந்த நாடகங்களை அரங்கேற்றுவதன் மூலம் நாடக மேடைக்குச் சேவை செய்தது மட்டுமல்ல; நாடகக் கலைஞர்களை உருவாக்குவதிலும் சேவை செய்தவர். தமது நாடகக் குழுவின் மூலம் பலரைத் தயாரித்ததோடு நடிகர்களுக்குப் பயிற்சி தருவதற்கென்றே, 'நாடகப் பண்ணை' என்ற அமைப்பையும் நடத்தினார். அவரிடம் கலை பயின்ற பலர், நாடகங்கள் தவிர, அவரைப் போலவே சினிமாவிலும் நடித்துப் பெரும்புகழ் பெற்றனர். தம்மை விடவும் கூட அவர்கள் அதிகப் பிரபலம் அடைந்ததைக் கண்டு மகிழ்ச்சிப் பெருமிதத்தில் மிதப்பார் சகஸ்ரநாமம்!

தமிழ்ப்பண்பாட்டுக்கு விரோதமாக எதையும் செய்ய மாட்டார் என்றாலும் நாடக அரங்கில் புதுமைகளைப் புகுத்த அஞ்சாதவர் சகஸ்ரநாமம். கல்கத்தா சென்றிருந்த போது சுழலும் அரங்கைப் பார்த்தார். 'ஏன் தமிழ் நாட்டில் இப்படிச் செய்ய முடியாதா என்ன?' என்று தம்மைத் தாமே கேட்டுக் கொண்டு திரும்பியவர், சாதித்துக் காட்டினார். மூன்று 'ஸெட்'கள் சுழன்று வரும் அமைப்பை இங்கு முதன் முதலில் உருவாக்கியவர் அவரே. ஸெட் அல்லது காட்சி ஜோடனையில், அழகுணர்வோடு எளிமையைப் புகுத்தியவரும் அவர்தான். கலா சாகரம் ராஜகோபால் உதவியுடன் இதனைச் சாதித்துப் பாராட்டுப் பெற்றார்.

கவிதை நாடகம் போட முடியும், வசூல் அமரர் கல்கி. உலக சமாதானத்துக்கு ஆசிய ஜோதியைவிட அதிகம் பாடுபட்டவர் யார்? அதனால்தான் 'மோகினித் தீவு' என்ற கல்கியின் குறுநாவல், ஹிந்தி, ஆங்கில மொழி பெயர்ப்புக்களில் நேருஜியின் பிறந்த நாள் பரிசு நூலில் இடம் பெற்றது. இந்த விவரத்தை அறிந்த சகஸ்ரநாமம், 'இந்த கைய உன்னதக் கருத்து நாடகமாக வேண்டாமா?' என்று கேட்டதுடன் அரும்பாடு பட்டு அற்புதமாக அரங்கேற்றினார். அதுமட்டுமல்ல, தியேட்டரை வாடகைக்கு எடுத்துத் தொடர்ந்து நாடகம் போடுவது என்ற வழக்கம் மறைந்து, நாடகக் குழுக்கள் சபாக்களை மட்டும் நம்பி வாரக் கடைசி நாட்களில் நாடகம் போடுவது என்ற நிலைக்குத் தள்ளப்பட்டுவிட்ட காலகட்டத்தில், தொடர்ந்து பல வாரங்களுக்கு ஒரே அரங்கில் மோகினித் தீவை நடத்திக் காட்டிச் சாதனை புரிந்தார் சகஸ்ரநாமம்.

அவரால் வளர்த்து விடப்பட்டவர்களுள் ஒருவரான கோமல் சுவாமிநாதனிடம், "நினைவு அலைகள் உங்கள் உள்ளத்தில் பொங்கிப் பிரவகித்துக் கொண்டிருக்குமே?" என்றேன்.

"அவருடைய நாடகப் பணிகள் இருக்கட்டும் ஸார்; மனுஷனைச் சொல்லுங்கள்" என்றார் கோமல்.

உண்மைதான்; ஓசைப்படாமல் ஏராளமான பேருக்கு உதவியவர் சகஸ்ரநாமம். தவிர, பாரதி விழாவா, வள்ளலார் விழாவா, வறுமையில் வாடும் ஓர் எழுத்தாளருக்கு நிதி திரட்ட வேண்டுமா? சகஸ்ரநாமம் உதவ மட்டுமல்ல, உழைக்கவும் அங்கே இருப்பார்.

எளிய தோற்றம், மிருதுவான பேச்சு, இனிய புன்னகையுடன் வாழ்நாளின் கடைசி தினத்தன்று கூட நாடக ஒத்திகை பார்த்த கடமை வீரர் சகஸ்ரநாமம்.

— கி. ராஜேந்திரன்

எல்லோரும்...



...எல்லோரும்...



...எல்லோரும்...



எல்லோருமே
விரும்புவது
நியூட்ரின்
**ட்விங்க்**




- ஆரஞ்சு
- லெமன்
- மேங்கோ
- பைனாப்பிள்
- கிரேப்

**ட்விங்க்**
ஸா:ப்ட் டிரிங்க் கான்ஸன்ட்ரேட்




சுவைகளும் புதுமை, சுவைத்திட இனிமை

ACIL/090/87-Tam

''அண்ணே... அண்ணே...! நாம பண்ணின ஊழலே விசாரிக்க விசாரணைக் கமிஷன் அமைச்சுட்டாங்க... என்னண்ணே பண்றது...?''

''பூ! விசாரணைக் கமிஷன்தானே... இதுக்குப் போயி ஏன் இப்படிப் பயப்படுறீங்க...?''

— கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா.





''சீனுகிட்ட நான் கடன் வாங்கும் போது ராமு அபசகுனமா நடந்துக்கிட்டதிலே எனக்குக் கடன் கிடைக்காமப் போச்சு...''

''அடக்கஷ்டமே, தும்மித் தொலேச்சானு?''

'ஊகூம். ஏப்பம் விட்டான்!''

— கடுவை கோபால்சாமி.

எமதர்மன்: சித்ரகுப்தா! இந்த டாக்டரை நரகத்துக்கு அனுப்ப வேண்டும் என்கிருயே, ஏன்?

சித்ரகுப்தன்: இவர் செய்த ஆபரேஷன்களிலே விதிமுடிஞ்சு போனவங்க நம் கணக்குப்படி நாலு பேர்தான். ஆனால் நாற்பது பேரின் விதியை இவரே முடிச்சிருக்கார்...!

— அ. தெய்வசிகாமணி.





''அந்த ஆள் மகா கஞ்சன்யா.''

''ஏன், வீட்டுக்குப் போனு காப்பி கூடத் தர்றதில்லேயா!''

''அதாவது பரவாயில்லேயே; காப்பி கொடுத்துப் பில்லேயும் கையில கொடுத்திடுறனே!''

— ஜெய்சங்கர்.

''டாக்டர், என் மனைவி இவ்வளவு வயசாகியும் இன்னும் சின்னக் குழந்தை மாதிரியே நடந்துக்கிறு!''

''அப்படி என்ன செய்யறுங்க?''

''நான் கப்பல் செஞ்சு தண்ணீரிலே விட்டா, அதைத் தண்ணிக்குள்ள அமுக்கிடுறு!''

— திருத்துறைப்பூண்டி ஷேக்ராஜ்







**1950 களில் கென்யாவின் சுதந்திரப் போராட்டப் பின்னணியில் வெள்ளைக்காரர்களிடம் வேலைக்குச் சேரும் மாங்கி என்ற பன்னிரண்டு வயதுச் சிறுவனைப் பற்றி மிக அற்புதமாக எடுக்கப்பட்ட 'THE KITCHEN TOTO' என்ற படத்தில் ஒரு கிளைக்கதையின் தழுவல்தான் இந்தக் கதை. 'மாங்கி' யாக நம் மனத்தில் பசுமையான சுவடுகளைப் பதிக்கும் எட்வின் மகிந்தா என்ற கறுப்புச் சிறுவனுக்கும், தம் முதல் படத்திலேயே நம் நெஞ்சைப் பிழிந்துவிடும் டைரக்டர் ஹேரி ஹுக் (Harry Hook) கிற்கும் தனித்தனியே பாராட்டுப் பத்திரங்களை வழங்கலாம்.**

சிறுவன் அன்பழகன் — பன்னிரண்டு பதின்மூன்று வயதிருக்கும் — ஃபாரெஸ்ட் ஆபீஸர் பரமானந்தின் வீட்டில் வேலைக்குச் சேர்ந்தான்.

ஸ்டோர் ரூமுக்கு வெளியே சின்ன இடுக்கில் ராத்திரி நேரம் முடங்கிக் கொள்ள வேண்டும். சரியாகக் காலை ஐந்து மணிக்கெல்லாம் எழுந்து இருட்டு விலகுவதற்குள் பால் வாங்கிக் கொண்டு வரவேண்டும். ஆறு மணியிலிருந்து சமையலுக்கு உதவ வேண்டும். எட்டு மணிக்குக் கடிகாரம் தயாராகும் போது எஜமான் பரமானந்திற்குக் குளிக்க வெந்நீர் எடுத்து வைத்து, எட்டரை மணிக்கு அவருடைய யூனிஃபார்மை நீட்டி ஷூ மாட்டி, அதன் லேஸ்களை மிகச் சரியாக முடிச்சிட்டு ஜீப் வரை அவருடைய பெட்டியைத் தூக்கிச் சென்று — ஒன்பது மணியிலிருந்து சதீஷுடன்.

அன்பழகனுக்கு எஜமானரை ரொம்பப் பிடித்திருந்தது. அவர் மிடுக்காக உடையணிந்து ஜீப்பில் ஏறும்போது, ஜீப்பிலிருக்கும் அதிகாரிகளெல்லாம் அடிக்கும் சல்யூட்களைத் தலையசைப்பில் ஏற்கும் பாங்கு பிடிக்கும். மிகப் பெரிய பதவியில் இருந்த போதும், சில சமயம் செல்லமாக அவன் தலையைச் சிலுப்பிவிட்டுப் போகும் போது பெருமையாய் இருக்கும்.

எஜமானி நேர் எதிர். எப்போதும் கடுவன் பூனை முகம். எப்போதடா தப்பு செய்வான் என்று காத்திருந்து, காதைப் பிடித்துச் சிவக்கச் சிவக்கத் திருகும் ரகம். கை தவறிக் கீழே போட்டுடைத்த பீங்கான் கோப்பைக்குச் சம்பளத்தில் பிடிக்கப் போகிறேன் என்று எச்சரிக்கும் முரட்டுக் குணம்.

எஜமானியாவது பரவாயில்லை. சதீஷ் — ஐயோ, அவன் ரொம்ப மோசம். ஏனோ அவனை ஸ்கூலுக்கு அனுப்பவில்லை. ஜீப்பில் சில சமயம் வாத்தியார்கள் வீட்டுக்கு வந்து பாடம் சொல்லிக் கொடுப்பார்கள். மற்ற நேரமெல்லாம் அந்த ராட்சஸ நாயோடுதான் பொழுதைக் கழிப்பான். அன்பழகனின் நேரத்தில் பெரும் பொழுது சதீஷோடுதான் கழியும்.

"டேய் அன்பு, இங்கே வாடா."
சதீஷின் குரல் சீற்றத்துடன் வந்தது.

அன்பழகன் தன் சாப்பாட்டுத் தட்டை அவசரமாகத் தள்ளிவிட்டு எழுந்து ஓடினான்.

"சாப்டுட்டிருந்தியா?" கேள்வியே கடுப்பாக வந்தது.

"ஆமா."

"போய்க் கையைக் கழுவிக்கிட்டு வா. காட்டுக்குப் போகலாம்..."

"ஐயோ, ஃபாரெஸ்ட் பக்கம்லாம் போகக் கூடாதுன்னு எஜமானர் வார்ன் பண்ணியிருக்காரே..."

"டேய், என்கிட்ட இங்கிலீஷ் வார்த்தையெல்லாம் பேசாதேன்னு சொல்லியிருக்கேன் இல்ல? நானும், நீயும் மட்டும் போறோம் — வேட்டைக்கு. மம்மிகிட்ட கோயிலுக்குன்னு சொல்லுவேன் — இல்லேன்னு நீ காட்டிக் கொடுக்கக் கூடாது..."

சற்றே முண்டும் முடிச்சுமான பாதையில் ஏற்றம் இருந்தது. அடர்த்தியான மரங்களினூடே சூரிய வெளிச்சம் தடுமாறியது. அன்பழகன் அரை டிராயர் அவிழ்ந்து விடாமல் இடுப்பருகே மடித்து விட்டிருந்தான். சதீஷ் பிஸ்டலை வேகவேகமாக ஆட்டியபடி, கான்வாஸ் ஷூக்களின் உபயத்தில் முரடான பாதையில் வேகமாக நடந்தான். அன்பழகன் குத்தும் முட்களைப் பிடுங்கி எறிந்து கொண்டு அவன் பின்னே விரைந்தான்.

காட்டுப் பகுதியில் நுழைந்ததுமே, டிர்ரக், டிர்ரக், ட்வீக், ட்வீக், உக்குய், உக்குய் என்று விதவிதமான பட்சி கானங்கள்.

சதீஷ் பெரிய வேட்டைக்குப் புறப்பட்டுவிட்ட கர்வம் முகத்தில் தெறிக்க, அங்கங்கே நின்று, மரத்திலிருந்த பட்சிகளைக் குறி பார்த்தான். சரியான எய்ம் இல்லாத போது 'ந்சு' என்று பிஸ்டலை இறக்கினான். மேலே நடந்தான்.

மரங்கள் விலகி, சற்றுத் தெளிவான பகுதி வந்தது. சலசலவென்று தண்ணீர் ஓடை ஒன்று திசை புரியாமல் குறுக்கிட்டது. நீரலைகளில் வெயிலின் பளபள பிரதிபலித்து, கண்களைக் கூசச் செய்தது.

"டேய் அன்பு... நீ தண்ணில எறங்கு..."

"தண்ணிலயா?"

Filmotsav



# இலக்கு

"ஆமா... இங்கே அதிக ஆழம் இல்லே... இறங்கி நீ தண்ணில நில்லு. நான் தண்ணிக்கு மேல் உன்னைக் குறி பார்ப்பேன். ஒன், டூ, த்ரீன்னு சொல்றப்ப சுடுவேன். நீ கபால்னு தண்ணிக்குள்ள குனிஞ்சிடு..." சதீஷ் கண்களில் ஆர்வம் மின்னச் சொன்னான்.

"ஐயையோ, நான் மாட்டேன்... எனக்குப் பயமாயிருக்கு..." அன்பழகன் கைகளை அவசரம் அவசரமாக மறுப்பாக ஆட்டினான்.

"நீ தண்ணில எறங்கலே, இப்படியே சுட்டுடுவேன்..."

அன்பழகன் கண்களில் கிலி துள்ளி வந்தது. தண்ணீருக்குள் அவசரமாகப் பாய்ந்தான். மார்பு உயரத்திற்கு நீர் சிலீர் என்று தழுவி ஓடியது. அடிமட்டத்தில் சின்னஞ் சிறு கூழாங்கற்களும் மணலும். தண்ணீரின் சில்லிப்பும், செயலின் அதீத பயமும் அன்பழகனை நடுங்கச் செய்தன.

சதீஷ் ஒரு காலை முன்னே வைத்து பாலன்ஸ் செய்து நின்றான். முகத்தில் கொடூரமான புன்னகை. துப்பாக்கியை உயர்த்தி அதன் கண் வட்டம் வழியே ஒற்றைக் கண்ணால் அன்பழகனின் நடுங்கும் முகத்தைக் குறி பார்த்தான்.

"ஒன்... டூ... த்ரீ... டிஷ்யூங்..."

தண்ணீரில் 'ஸ்ப்ளாஷ்' என்ற சத்தத்துடன் அன்பழகன் விழுந்தான். விழுந்து மூச்சுத் திணறி, சடாரென்று எழுந்தான்.

பிஸ்டலிலிருந்து தோட்டா வெளிப்பட்ட வேகத்தில் குறி பிசகி, அன்பழகனிடமிருந்து குறைந்தது பத்தடி தள்ளி, தண்ணீரில் மீன் கொத்தி போல் சீறிப் போனது.

"ச்சே..." சதீஷ் ஷூக்காலைத் தரையில் உதைத்தான். "இன்னும் ஒரு சான்ஸ்."

அன்பழகன் உள்ளூர வியர்த்தான். சதீஷைப் பற்றி எதுவும் சொல்ல முடியாது. த்ரீ வரை சொல்லாமல் திடீரென்று ட்ரிகரை இழுத்து விட்டால்?

ஆனால் இரண்டாவது முறையும் குறி பிசகி மரத்தில் ஒரு சில்லு பெயர்ந்தது.

"புல்லட்லாம் வேஸ்ட் ஆகுது... வெளில வா..."

அன்பழகன் சந்தோஷத்தில் கண்ணீர் விட்டுக் கொண்டு ஓடைக்கு வெளியே ஓடி வந்தான். எதிர்பாராத தருணத்தில் சதீஷ் துப்பாக்கியால் அன்பழகனின் ஈர உடம்பில் அடித்தான். விண் என்று தோள்பட்டையிலிருந்து உடம்பு பூராவும் வலி பரவ, அன்பழகன், "அம்மா" என்று அலறினான்.

"நீ ஒழுங்கா நிக்கலே... அதான் ரெண்டு வாட்டியும் எய்ம் தவறிடிச்சு..."

அந்த நேரத்தில் ஒரு ஜீப்பின் ஓசை கேட்க, "ஓடிவா, நாம சுட்ட சத்தம் கேட்டிருச்சு போல". சதீஷ் கால் பிடரியில் இடிக்க ஓடினான். அன்பழகன் டிரைவரைப் பிடித்துக் கொண்டு ஈரம் உதற அவன் பின்னால் ஓடினான்.

பரமானந்த் நியூஸ் பேப்பரின்



The following particulars regarding the ownership of 'KALKI' the Tamil weekly newspaper, are published as called for by Rule 8 of the Registration of Newspapers (Central) Rules 1956.

FORM IV

1. Place of Publication: Madras
2. Periodicity of Publication: Weekly
3. Name of Printer: V. Murali
   Nationality: Indian
   Address: AA-117, Shanthi Colony,
   Anna Nagar,
   Madras-600 040.
4. Name of Publisher: V. Vaidyanathan
   Nationality: Indian
   Address: 6-A, Warren Road,
   Madras-600 004.
5. Name of Editor: K. Rajendran
   Nationality: Indian
   Address: 1, Fifth Street,
   Lake Area,
   Nungambakkam,
   Madras-600 034.
6. Names and addresses of individuals who own, the newspaper and partners or shareholders holding more than one per cent of the total capital. Bharathan Publications Private Limited, 84/1-C, Race Course Road, Guindy, Madras-600 032.

I hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

V. Vaidyanathan
Publisher

1.3.1988

பரப்பில் மறைந்திருந்தார்.

"அய்யா..." அன்பழகன் அறை வாசலில் தயங்கினான்.

"என்ன அன்பு?"

"உங்ககிட்டே ஒரு விஷயம் சொல்லனும்யா...".

"அட, ஏன் அழறே? வா... என்ன ஆச்சு சொல்லு..." — பரமானந்த் பேப்பரை மடித்து வைத்துவிட்டு ஆர்வத்தோடு அருகே கூப்பிட்டார்.

அன்பழகன் விம்மல்களும், அழுகை வெடிப்புக்களுமாகக் காட்டில் நடந்ததைச் சொன்னான்.

பரமானந்த் சற்றே கவலையுடன் பேசினார்.

"அன்பு... நான்தான் அவனுக்கு அந்தப் பிஸ்டலைக் கொடுத்தேன்... சும்மா வெளே யாடறதுக்கு. ஆனால் தோட்டா கொடுக்கலே... அவனா எடுத்திருக்கான். துப்பாக்கில லோட் பண்றதுக்குக் கூடத் தெரிஞ்சிருக்கு அவனுக்கு... சுபாவமாவே அவனுக்குச் சின்ன வயசிலேர்ந்து வேட்டையாடறதிலெல்லாம் இன்ட்ரஸ்ட் இருக்கு... நான் கூப்பிட்டுக் கண்டிக்கிறேன்..."

அவர் கூப்பிட்டுக் கண்டித்ததின் பலன் மறுநாள் தெரிந்தது. விறகுக் கட்டையால் சதீஷ் அன்பழகனின் முதுகில் மூன்று கோடு போட்டான். "அப்பாகிட்ட என்னைக் கோள் சொன்னதுக்காக..."

ஒவ்வொரு நாளும் அன்பழகனுக்கு ஏதாவது ஒரு சின்னத் தண்டனை என்று சதீஷ் தீர்மானித்திருந்தான். ஒரு நாள் மரத்தின் மீது ஏற்றி விட்டு, ஏணியை நகர்த்தி இரண்டு மணி நேரம் உச்சிக் கிளையிலேயே உட்கார வைத்தான். இன்னொரு தடவை, நாயை 'காட்ச் ஹிம்' என்று ஏவிவிட்டுத் தோட்டம் முழுக்க ஓட ஓட விரட்டி, சந்தோஷப்பட்டுச் சிரித்தான். வெந்நீரைச் செம்பில் எடுத்து அன்பழகனின் முதுகில் விசிறினான்.

மறுபடியும் எஜமானரிடம் சொல்லியே ஆக வேண்டும் என்று அன்பழகன் தீர்மானம் செய்த அந்தச் சனிக்கிழமை, பரமானந்த் வெகு தாமதமாக வீடு திரும்பினார்.

ஜீப்பிலிருந்து இறங்கும் போதே டென்ஷனாக இருந்தார். அவசரமாகச் சாப்பாட்டு மேஜை ஒழுங்குபடுத்தப்பட்டது.

"காட்டிலே அடிக்கடி சந்தன மரம் திருட்டுப் போவுதுன்னு சொன்னேனே, இன்னிக்கு ராத்திரி அது சம்பந்தமா திருடனுங்களுக்கு ஒரு பெரிய வலை விரிச்சிருக்கோம். நான் உடனே புறப்படணும்..."

சாப்பிட்ட கையோடு ஜீப் ஏறிப் புறப்பட்டுப் போய் விட்டார்.

அன்பழகன் சதீஷைப் பற்றிச் சொல்ல முடியாத துக்கத்தோடு வேலைகளில் ஈடுபட்டான்.

இரவு.

அன்பழகன் கைகளை மார்பில் குறுக்கிக் கொண்டு இருட்டில் படுத்திருந்தான். திடீர் என்று விழிப்பு வந்தது.

விழிப்பு வந்ததும் அதற்கான காரணம் புரிந்தது.

வீட்டிற்குள்ளிருந்து ஒரு பெண்ணின் ஈனமான குரல் — எஜமானியின் குரல்! — கூடவே சிரிக்கும் சில ஆண்களின் முரட்டுக் குரல்கள்.

அன்பழகன் வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தான். சப்தமெழுப்பாமல் ஹாலுக்குள் ஓடினான். எஜமானியின் படுக்கையறையைச் சமீபித்த போது குரல்கள் தெளிவாகக் கேட்டன.

"பெரிய மகாத்மா காந்தி உன் புருஷன். காட்டுலே கெடக்கற சந்தன மரத்தை நாங்க வெட்டினா, இவன் சொத்து போயிடற மாதிரி, குறுக்கே குறுக்கே மூக்கை நுழைக்கிறான். அவனுக்கு ஒரு பாடம் சொல்லாம நாங்க ஓயப் போறதில்லே... இழுத்துட்டு



பாடசாலை வித்யார்த்திகளின் ஒரு பகுதி

மஹான் ஸ்ரீ. கோவிந்த தீக்ஷிதரவர்களால் 1542ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து நடந்து வரும் வேத பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய் போல் இயங்கிக் காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 85 மாணாக்கர்கள் வேதாத்யயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஒரு நாள் உணவளிக்க சுமார் ரூ 250/— ஆகிறது. இந்த தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ 2500/— மூலதனம் ஏற்படுத்தியோ அல்லது அவ்வப்போது ரூ 250/— அனுப்பியோ ஒரு குறிப்பிட்ட தினத்தில் உணவளிக்கும் கைங்கர்யத்தில் பங்கு கொள்ளக் கோருகிறோம்.

நன்கொடை அனுப்ப வேண்டிய பெயரும் முகவரியும்:

அத்வைத வித்யாசார்யா மஹா ராஜா ஸாஹேப்
ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி
D—76, மூன்றாவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர் காலனி,
கும்பகோணம்—612 001.

**தங்கள் நன்கொடைக்கு 80 G விதியின்படி வருமான வரிவிலக்கு உண்டு.**

வாங்கடா இவனை... திமிறின நாயை வெட்டின மாதிரி இவனையும் வெட்டுங்க...''

அன்பழகன் அடிவயிற்றில் மின்னல் தாக்க, மெல்ல அந்த அறைக்குள் எட்டிப் பார்த்தான்.

நான்கு முரடர்களின் பிடியில் எஜமானி வாயில் துணி யடைக்கப்பட்டு, திமிறிக் கொண்டிருந்தாள்.

அன்பழகன் திரும்பி ஓடினான்.

வீட்டில் சதீஷைத் தவிர வேறு யாரும் இல்லை. சதீஷின் ரூமுக்குள் நுழைந்து, கட்டிலில் பாய்ந்து, அவன் போர்வையை விலக்கி, அவன் முகத்தைத் தட்டி எழுப்பினான். பரபரப்பாக விஷயத்தை ரகசியமான குரலில் சொன்னான்.

சதீஷ் அன்பழகனை விருட்டென்று தள்ளிக் கொண்டு எழுந்தான். மேஜைக்கு ஓடினான். மேஜை விளக்கைப் போட்டு, டிராயரைத் திறந்து பிஸ்டலை எடுத்துக் கொண்டான். பரபரப்பான கைகளால் தோட்டாக்களைப் பொறுக்கி, பிஸ்டலில் பொருத்திக் கொண்டு வெளியே ஓடினான்.

அன்பழகன் அவனுக்குப் பின்னே ஓடினான்.

வாசல் கதவு திறந்து கிடந்தது. வராந்தாவில் நாய் ரத்தத்தில் கிடந்தது. தோட்டத்தின் புல்வெளியில் நான்கு பேரும் தரதரவென்று இழுத்துப் போக, சதீஷின் அம்மா கால்களையும், உடம்பையும் உதறிக் கொண்டே துடித்தாள்.

''எங்க அம்மாவை விட்டுடுங்க...'' சதீஷ் அந்த இரவின் அமைதி கிழிய அலறினான். பிஸ்டலை இரண்டு கைகளாலும் பற்றி உயர்த்தி, ''சுட்டுடுவேன்... விட்டுடுங்க...'' என்று தொண்டை அதிர மறுபடியும் கத்தினான்.

முரடர்கள் நிற்கவில்லை. இன்னும் அவசர அவசரமாக அவன் அம்மாவை இழுத்தார்கள்.

சதீஷ் அம்மாவின் கால்களைப் பற்றியிருந்தவனைக் குறி வைத்தான். ஆத்திரம், அவசரம், படபடப்பு — விசையை இழுத்தான்.

அந்த இருட்டின் மின்சாரம் பாய்ந்த சூழ்நிலையை அதிரடித்துக் கொண்டு தோட்டா பாய்ந்தது — நேரே சதீஷின் அம்மாவின் நெஞ்சுக்குள்ளே. அவள் சட்டென்று தொய்ந்து விழ, அந்த அபார அதிர்ச்சியில் முரடர்கள் அவளை அப்படியே போட்டு விட்டு வாசலுக்கு ஓடினார்கள்.

''சதீஷ்!'' அன்பழகன் அலறினான்.

''அம்மா!'' சதீஷ் துப்பாக்கியைத் தூர எறிந்தான். படிகளில் இடறி விழுந்து தோட்டத்தில் ஓடினான். ''அம்மா, அம்மா, அம்மா...'' அவனுடைய முரட்டுப் பிடிவாத முகம் அம்மாவின் ரத்தம் தோய்ந்த நெஞ்சில் புதைந்து முட்டியது.

அன்பழகன் டிபன் தட்டோடு சதீஷின் அறையில் நுழைந்தான்.

கட்டிலில் ஒடுங்கி உட்கார்ந்திருந்த சதீஷ் அன்பழகனை வெறித்துப் பார்த்தான். அன்பழகன் அவனை நெருங்கி, மடியில் டவலைப் பரப்பினான்.

டிபன் தட்டைத் திறந்து, ''இன்னிக்கு உப்புமா'' என்றான். ஸ்பூனால் கொஞ்சம் கொஞ்சமாக எடுத்து சதீஷின் வாய்க்குள் ஊட்டினான். சாப்பிட்டு முடித்ததும் ஈரத் துணியால் வாய் துடைத்தான்.

ரூமை விட்டு வெளியேறும்போது, சிலந்திகள் வலை பின்ன ஆரம்பித்துவிட்ட கான்வாஸ் ஷூக்களைப் பார்த்தான்.

அவன் கண்களில் இருந்து நீர் முத்துக்கள் புறப்பட்டுக் கீழே உருண்டன.

— ஜெயமன்மதன்




முறிந்து போகும் திருமணங்கள்

கவர் ஸ்டோரி

## தளபதி திடமதி:

''சட்டமன்றத்தில் எதிர்க்கட்சி உறுப்பினர்களை ஓட ஓட விரட்டி வீராவேசத்துடன் தாக்கி, வரலாறு படைத்த நமது கட்சி எம். எல். ஏக்களுக்கு இந்த ஆண்டுக்கான ''அண்ணாவிருது'' வழங்கி கௌரவிக்க வேண்டும் என்ற தீர்மானத்தைப் பெருமிதத்துடன் நான் முன்மொழிகிறேன்!''

— வளர்மதி ஆசைத்தம்பி, தஞ்சாவூர்.




''நாடு முழுவதும் போராட்டங்கள் பெருகிவிட்டன. யாரெல்லாமோ போராட்டம் நடத்தி அந்தத் ''தொழிலையே'' கெடுத்து வருகிறார்கள். இதனைத் தடுக்க, லைசென்ஸ் பெற்ற அரசியல்வாதிகள் மட்டுமே போராட்டம் நடத்தலாம் என்ற அவசரச் சட்டத்தை அரசாங்கம் இயற்ற வேண்டும்!''

— வத்ருப். எஸ். நாராயணன், மதுரை.




திடமதி: ஏன் இப்படிக் கவலையா உட்கார்ந்திருக்கீங்க?

முன்னாள் எம். எல். ஏ.: சட்டசபையைக் கலைச்சுட்டாங்க; இருந்த எம். எல். ஏ. பதவியும் போயிடுச்சு; இனி என்ன செய்யறதுன்னு யோசிக்கிறேன்...

திடமதி: இதுல யோசிக்க என்ன இருக்கு? உங்க முன் அனுபவத்தையெல்லாம் பயன்படுத்திப் பேட்டை ரவுடிங்களுக்கு ஒரு பயிற்சிக்கூடம் ஆரம்பிச்சுப் பணம் பண்ண வேண்டியதுதானே!

— கு. கணேசன், சென்னை — 15.

''திட்டக் கமிஷன் என்று ஒன்று அமைத்ததால்தானே அவர்கள் திட்டத் திட்ட நாம் குட்டுப்பட்டுக் குனிய வேண்டியிருக்கிறது...? நாங்கள் ஆட்சிக்கு வந்தால் திட்டக் கமிஷனை நீக்கிவிட்டுத் திட்டாத கமிஷன் ஒன்றை உடனடியாக அமைப்போம் என்று உறுதி அளிக்கிறேன்!''

— அ. சா. குருசாமி, திருவாரூர்.






**ரூ. 100/— பரிசு!**

அ. சா. குருசாமி, வளர்மதி ஆசைத்தம்பி ஆகிய ஒவ்வொருவரும் எழுதிய மூன்று வெவ்வேறு திடமதி துணுக்குகள் இதுவரை பிரசுரமாகியுள்ளன. எனவே பரிசு இரட்டிப்பு முறைப்படி இவ்விருவரும் தலா ரூ. 100/- பரிசு பெறுகிறார்கள்! வாழ்த்துக்கள்.

[redacted]



ஹீரோயினா?

* ப. மணிகண்டபிரபு, போடிநாயக்கனூர்.

? 'எம். ஜி. ஆர். வழியில் நடப்பேன்' எனக் கூறிய ஜானகி அம்மையார் இந்திய அமைதிப் படைக்கு எதிர்ப்புத் தெரிவித்திருக்கிறாரே?

! எம். ஜி. ஆரின் ஆன்மா, 'அது ஜானகியின் தனிப்பட்ட கருத்து' என்று சொல்லி விடுமோ என்னமோ!

* கு. நாகராஜன், குருசாமிபாளையம்.

? 'அரசியல் அமைப்புச் சட்டப்படி சபாநாயகர் சபையில் நடந்து கொண்டது நியாயமானதே' எனக் காளிமுத்து கூறுகிறாரே...?

! 'கெட்டும் சாஸ்திரப்படி கெட்டுப் போனான்' என்பதாக ஒரு வழக்கு உண்டு. அதைப் போலத்தான் இதுவும்.

* ஏ. ஷர்மிளா, நாட்டரசன்கோட்டை.

? நகம் கடிக்கும் பழக்கத்தை விட்டொழிக்க ஒரு வழி சொல்லுங்களேன்?

! நிலைக் கண்ணாடி எதிரே நின்று நகம் கடித்துப் பாருங்கள், எத்தனை அசிங்கமாக இருக்கிறது என்று.

# ஜெயலலிதா ஹீரோயினா? வில்லனா?

* ஆர். கே. அருள் செல்வன், விக்கிரபாண்டியம்.

? ஜெயலலிதா ஹீரோயினா, வில்லனா?

! வில்லன் என்ற சொல்லைத் தமிழாக ஏற்றுக் கொண்ட பிறகு பெண்பாலைக் குறிக்க, 'வில்லி' என்பதே ஓசை நயத்துடன் உள்ளது. (வில்லேந்திப் போரிடுபவர் இன்று யாரும் இல்லை.)

* எம். இராசன், கிருஷ்ணகிரி.

? ஜனார்த்தன் பூஜாரி இலாகா பறிப்பு பற்றி?

! தங்களைப் பூசாரியின் பிடியிலிருந்து மீட்டதற்காகப் பிள்ளையாருக்குத் தேங்காய் உடைத்துக் கொண்டிருக்கிறார்கள் வங்கி அதிகாரிகள்.

* ஜெ. பிஸ்மி, திருத்துறைப்பூண்டி.

? '1984 தேர்தலில் அ. இ. மு. க. வென்றதற்கு இந்திரா காந்தி அனுதாப அலையே காரணம்' என்றாரே ஜெயலலிதா?

! எம். ஜி. ஆருக்கு அவர் செய்து வருகிற பல துரோகங்களுள் ஒன்று.



* தெளிவான சிந்தனை



* இலாகா பறிப்பு



* கட்டிக்கரும்பு

* எம். ஜான் முஹம்மது, இளையான்குடி.

? அ. இ. மு. க. வின் இரு அணிகளிடம் ஏதேனும் ஓர் ஒற்றுமையாவது இருக்கிறதா?

! ஓ! பேஷாக இருக்கிறதே; லஞ்ச ஊழல்.

* ஜே. பி. பொன்பிரபாகரன், சென்னை— 14.

? 'இந்தியாவிலேயே தமிழகத்தில்தான் எப்போதும் சிறந்த நிர்வாகம் நடைபெற்று வந்திருக்கிறது' என்று அலெக்ஸாந்தர் கூறுகிறாரே?

! 'கூரை மேல் ஏறிக் கொள்ளி வைப்பவன் தான் உள்ளதற்குள் நல்ல பிள்ளை' என்று தகப்பன் சொன்ன கதைதான்!

* ஆர். வசந்தகுமார், கும்பகோணம்.

? குமுதத்தில் எழுதுகிற தலைவர்கள் ஒவ்வொருவரும் எதிராளியின் சொந்த வாழ்க்கையின் அவலங்களைச் சொல்வதையே பிரதானமாய்க் கொண்டிருக்கிறார்களே?

! பொது வாழ்க்கையில் பிரவேசிக்கிற ஒருவனுடைய சொந்த வாழ்க்கையும் எல்லா

விதத்திலும் தூயதாக இருக்க வேண்டும். அப்போதுதான் அவனிடம் மக்களுக்கு நன் மதிப்புப்பெருகும். டிராக்மாறினால் அவனைப் பொது வாழ்விலிருந்து மக்கள் விரட்டி அடித்து விடுவார்கள். இது மேல்நாட்டு ஜனநாயகங்களில். இங்கே ஒருவனது தனிப்பட்ட வாழ்க்கையின் ஜல்ஸா — பைசா சாதனைகள் அவனது பாபுலாரிடியை அதிகரித்து வோட்டுக்களைக் குவியச் செய்கின்றனவே!

*** சித்ர பானு, விருத்தாசலம்.**

**? 'தர்மத்தின் வாழ்வதனைச் சூது கவ்வும்; தர்மம் மீண்டும் வெல்லும்' என்ற பாரதி வரிகளை அ. தி. மு. க. வின் இரு அணியினரும் கூறுகிறார்களே?**

! சைத்தான்கள் வேதம் ஓதுகின்றன.

*** மேகதூதன், ஸ்ரீரங்கம்.**

**? பகுத்தறிவு வாதியான கருணாநிதி கல்கி பேட்டியில் 'பாவிகள்' என்ற பதத்தைப் பயன்படுத்துகிறாரே?**

! 'பாவச் செயல்கள் புரிகிறவர் பாவிகள்; பிறவியால் யாரும் பாவி ஆகிவிடுவதில்லை' என்பதே பகுத்தறிவு வாதம்.

*** வி. ராதாகிருஷ்ணன், திருச்சி.**

**? 'மாலை வளர்கிறது' என்று கூறுகிறார்களே?**

! மாலை வளர்க்காமலேயே ஆதி பராசக்தியின் அருளைப் பெருக்க முடியும்.

*** சி. காந்தி, பள்ளத்தூர்.**

**? தங்கள் கட்சி ஆட்சிக்கு வந்தால், லஞ்ச லாவண்யமற்ற ஆட்சி அமையும் என்று ஜெயலலிதா கூறுகிறாரே?**

! அவருடைய சொற்களிலேயே பதில் கூறுவதென்றால், 'இது அவருடைய கருத்து: கட்சிக் கருத்தல்ல.

*** ரேவதி பிரியன், ஈரோடு.**

**? பந்தாக்களை வெறுப்பவராமே, புதிய ஆளுனர்?**

! இதை உண்மை என்றே ஏற்க வேண்டியிருக்கிறது. சென்னையை அவர் வந்தடைந்த போது போக்குவரத்து நிறுத்தப்பட்டதை அறிந்து, வருந்தி, மறுநாள் பதவி ஏற்கச் சென்ற போது அதே தவறு மீண்டும் நடக்காமல் பார்த்துக் கொண்டதைக் கவனிக்கும் போது.

*** க. தியாகராசன், நெய்வேலி.**

**? 'இருபது ஆண்டுகளாகக் கட்சிக்குத் தேர்தலே நடத்தாத இ. காங்கிரசுக்கு அங்கீகாரம் இருக்கக் கூடாது' என்கிறாரே, ஜெயில்சிங்?**

! அப்பாடா! ஒரே அபத்தமான அரசியல் பேச்சுக்களிடையில் ஒரு தெளிவான சிந்தனை, சேற்றிலே செந்தாமரையாகப் பூத்திருக்கிறது. 'உட்கட்சித் தேர்தல்களை நடத்தாத கட்சிகளுக்குப் பொதுத்தேர்தலில் நிற்க உரிமை இல்லை' என்று சட்டம் செய்வது ஜனநாயகத்தைப் பலப்படுத்தும்.

*** எஸ். மகேந்திரன், நீடாமங்கலம். ***

**? இந்திரா காந்தி போல் ராஜீவ் சாதனைகள் படைப்பாரா?**

! ஒன்றா, இரண்டா? விடுமுறைக்குப் பல லட்சம் அரசுச் செலவு; உருப்படாத ஒப்பந்தங்கள்; விமானத்தில் சர்வதேச டின்னர்; அதிகபட்ச செலவில் அயல்நாட்டுப் பயணம்; அடிக்கடி அமைச்சரவை மாற்றுவதில் கின்னஸ் ரிகார்டு; நல்லவரை வல்லவரை விலக்கி, ஆமாம் சாமிகளை மட்டும் வைத்துக் கொள்வது; போஃபோர்ஸ் — நீர் மூழ்கிப் பேரங்கள் இத்யாதியுடன் வெட்டல்ட்: ராஜ்ய சபையில் துணை ஜனாதிபதியின் தீர்ப்புக்கு எதிராக ரகளை செய்யுமாறு தமது கட்சிக்காரர்களைத் தூண்டி விட்டு விட்டுப் பிறகு அவைத் தலைவரை அவமதிப்பது போல் பாதியில் எழுந்து போனது. ஆந்திரா ஆளுனர் செய்யும் அபரிமிதச் செலவுகள் பற்றி உபேந்திரா கேள்வி எழுப்பியதை அனுமதித்ததுதான் அவைத் தலைவர் செய்த குற்றமாம்! அழகாயிருக்கிறதல்லவா! சந்தேகமேயில்லை; தாய் எட்டடி பாய்ந்தால் குட்டி பதினாறடி பாய்கிறது சாதனைகளில்!

*** ராஜேந்தர் பிரியன், திருச்சி.**

**? 'என் தங்கை கல்யாணி' படத்தில் சிம்புவின் நடிப்பு...?**

! 'சிம்பு சிம்பு, கட்டி கரும்பு!' என்ற பின்னணிப் பாட்டுத்தான் பதில்.

*** ஜி. நாராயணன், பெங்களூர்.**

**? ஹரிஜனங்கள் இன்னமும் கொடுமைப் படுத்தப்படும் செய்திகள் வந்து கொண்டிருக்கும்போது நாம் இந்துவாக இருக்கத்தான் வேண்டுமா?**

! நமது மதத்தைத் தூய்மைப்படுத்தத் துணிவுடன் நாம் முயற்சி மேற்கொள்ள வேண்டுமே தவிர, விட்டு விட்டு ஓடுவதும் வேற்று வீட்டில் தஞ்சம் புகுவதும் கோழைத்தனம்.

* ரூ. 15 பரிசு பெறுபவர்:

எஸ். மகேந்திரன்,
ஒரத்தூர் வடக்குத் தெரு,
நீடாமங்கலம் — 614 404.



# பி.சி.சொர்க்கார் தோற்றுப் போனார்!

மறக்க முடியாத அனுபவங்களில் இரண்டைச் சொன்னார் பி. சி. சொர்க்கார் ஜூனியர்:

ஒரு முறை கல்கத்தாவில், காய்கறி மார்க்கெட்டிற்குப் போயிருந்தேன். என்னை அடையாளம் கண்டு கொண்டதும் சிறு கூட்டம் சேர்ந்து விட்டது. ஒருவர், தம் கையிலிருந்த ரூபாய் நாணயத்தைக் காட்டி, ''எங்கே இந்த நாணயத்தை மறைந்து போகச் செய்யுங்கள் பார்க்கலாம்'' என்றார்.

''நாணயத்தை மறையச் செய்வது மேடையில் மட்டுமே சாத்தியம்; இங்கே முடியாது'' என்று நான் சொன்னதை அவர் நம்பவில்லை.

திடீரெனக் கூட்டத்திலிருந்த ஒருவர், ''சொர்க்கார்! நீங்கள் நிஜமாலுமே கிரேட்! பார்க்கெட்டில் நாணயத்தை மறையச் செய்ய முடியாது என்று சொல்லிக் கொண்டே மந்திரம்போட்டு என் பாக்கெட்டிலிருந்த நூறு ரூபாய் நோட்டை மாயமாய் மறையச் செய்துவிட்டீர்களே!'' என்றார். எனக்கு அதிர்ச்சியாய் இருந்தது.

அவரது ரூபாய் நோட்டை யாரோ பிக்பாக்கெட் அடித்திருக்க வேண்டும். நான் மாயமாய் மறையச் செய்யவில்லை என்று எவ்வளவு சொல்லியும் யாருமே நம்பவில்லை! ''எங்கே திரும்ப வரவழையுங்கள் பார்க்கலாம்!'' என்றார்கள்.

எனக்கு என்ன செய்வது என்றே புரியவில்லை. கடைசியில் என் பர்சிலிருந்தே நூறு ரூபாய் நோட்டை எடுத்துக் கொடுத்தேன்! ''ஆகா! மந்திர ஜாலம்! அபாரம்!'' என்று கூட்டம் மகிழ்ந்தது!

இன்னொரு சமயம் ஓர் உணவகத்தில் சாப்பிடப் போனேன். ஒரு சிறுவன் என்னிடம் வந்து, ''இதோ இந்த பிஸ்கட் பாக்கெட்டை வைத்து மேஜிக் செய்து காட்டுங்கள், பார்க்கலாம்'' என்று சொல்லி, பிஸ்கட் பாக்கெட்டைக் கொடுத்தான்.

நான் பாக்கெட்டிலிருந்த பிஸ்கட்களை ஒரு பிளேட்டில் கொட்டினேன். நான்கு பிஸ்கட்கள் இருந்தன. ''இதைச் சரி சமமாய் நாம் பங்கிட்டுக் கொள்வோம்'' என்று சொல்லி, காலி பிஸ்கட் பாக்கெட்டினுள் முதல் பிஸ்கட்டை வைத்து, உடைத்து, ''ஒரு பாதி உனக்கு; ஒரு பாதி எனக்கு'' என்று கூறி, அவனிடம் ஒரு பாதியைக் கொடுத்துவிட்டு, இன்னொரு பாதியைக் காலி பாக்கெட்டுக்குள்ளேயே வைத்திருந்தேன். இதே போலவே மற்ற மூன்று பிஸ்கட்களையும் பிஸ்கட் பாக்கெட்டினுள் வைத்து, பாதி பாதியாய் உடைத்து, ஒரு பாதியை அவனிடம் தந்துவிட்டு மறு பாதியை நான் எடுத்துக் கொண்டேன். கடைசியில் பையனிடம் கேட்டேன்: ''இப்போது தலா நான்கு அரை பிஸ்கட்கள் வைத்திருக்கிறோம், அல்லவா? நீ உன் நான்கு அரை பிஸ்கட்களை, இரண்டு முழு பிஸ்கட்டுகள் ஆக்குவாயா?''

அவன் 'முடியாது' என்றான்.

''நான் என் பங்கை இரண்டு முழு பிஸ்கட் ஆக்கிவிட்டேன் பார்'' என்று சொல்லிப் பாக்கெட்டைக் கவிழ்த்தேன். இரண்டு முழு பிஸ்கட்கள் வெளியில் வந்தன.

பையன் ஆச்சரியப்பட்டான். ''எப்படி இதைச் செய்தீர்கள்?'' என்று கேட்டான்.

''ரொம்பச் சுலபம். முதல் பிஸ்கட்டைப் பாதி பாதி எடுத்துக்கொண்டோம். இரண்டாவதையும் அப்படியே. ஆனால் மூன்றாவது பிஸ்கட்டை முழுசாய்ப் பாக்கெட்டுக்குள் வைத்துவிட்டு, ஒரு அரை பிஸ்கட்டை எடுத்து உன்னிடம் கொடுத்து விட்டேன். அதே போல நான்காவது பிஸ்கட்டையும் முழுசாய் வைத்துக் கொண்டு, இரண்டாவது அரை பிஸ்கட்டை உன்னிடம் தந்து விட்டேன்! என்னிடம் இரண்டு முழு பிஸ்கட்கள்; உன்னிடம் நான்கு அரை பிஸ்கட்கள்! அவ்வளவுதான்!'' என்றேன்.

— ஜூலி



சென்னை தியாகராயநகர் எஸ். அப்பாஸ்வாமி குரூப் நிறுவனங்களின் அதிபர் ஸ்ரீ எஸ். அப்பாஸ்வாமி அவர்களின் புதல்வி சௌபாக்கியவதி புவனேஸ்வரிக்கும், சென்னை ஸ்ரீ V. கிருஷ்ணய்யரின் குமாரன் சிரஞ்சீவி சுகவனம் என்கிற குமாருக்கும் சென்னையில் சமீபத்தில் விவாஹம் வெகு சிறப்பாக நடைபெற்றது. விவாஹத்துக்கும், மாலையில் நடந்த வரவேற்பிற்கும் சென்னை நகரப் பிரமுகர்களும், தொழிலதிபர்களும் வந்திருந்து தம்பதியரை ஆசீர்வதித்தனர். வரவேற்பில் சங்கீத கலாநிதி ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் இன்னிசையும் சிறப்பாக நடைபெற்றது. வாழ்க மணமக்கள்.



கல்கி பத்திரிகையில் பணியாற்றி ஓய்வு பெற்ற ஸ்ரீ K. வெங்கட்டராமன் அவர்களின் குமாரன் சிரஞ்சீவி கோதண்டராமனுக்கும், பெங்களூர் கஸ்டம்ஸ் அதிகாரி ஸ்ரீ J. ஜானகிராமன் அவர்களின் குமாரத்தி சௌபாக்கியவதி உஷாவிற்கும் சமீபத்தில் விவாஹம் வெகு சிறப்பாக நடைபெற்றது. வாழ்க மணமக்கள்.




# பீரங்கி வண்டியில் ஒரு மரண தண்டனை!

கொடுமையான பஞ்சம். ஒரிஸ்ஸாவில் 1856 இல் நிலவிய அவலத்தைப் பயன் படுத்திக் கொண்டு வியாபாரிகள் தானியங் களையெல்லாம் பதுக்கினார்கள்.

அறுபது வயதைக் கடந்த அந்த மனித ரால் மக்கள் படும் துயரைப் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. வறுமை, பசி, பட் டினியிலிருந்து மக்களைக் காப்பாற்றத் துடித் தார்.

வியாபாரிகளிடமிருந்து தானியத்தை விதை நெல்லாகப் பெற முயன்றார். ஊர்ப் பிரமுகர் என்கிற பொறுப்போடு, கிடங்கி லிருந்து தானியத்தை எடுத்து மக்களுக்கு வழங்க ஏற்பாடு செய்தார். ரெய்ப்பூரின் துணைக் கமிஷனராக இருந்த சார்லஸ் எலியட் என்பவருக்கு முன்கூட்டித் தகவல் கொடுத்துவிட்டுத்தான் அவர் இந்த ஏற் பாட்டைச் செய்தார்.

ஆனால், மக்கான் என்கிற வியாபாரி ஒருவரின் புகாருக்கு மதிப்புக் கொடுத்து, ஆங்கில அரசு சம்பல்பூரில் அவரைக் கைது செய்து, ரெய்ப்பூர் சிறையில் அடைத்தது.

1857ம் ஆண்டில் புரட்சிக் கனல் மூண்டு நாடு முழுவதும் தீ பரவிய போது —

ஒரிஸ்ஸாவின் சட்டிஷ்கர் பகுதியும் வெகுண்டு எழுந்தது. சிறையிலிருந்த அந்த அறுபத்திரண்டு வயதுக் கிழவர்தாம் தங் கள் தலைவன் என்று பிரகடனப்படுத்திய அந்த மக்கள், சிறையை உடைத்து அவரை விடுவிக்கவும் செய்தார்கள்.

அந்தக் கிழவர் தம் தொண்டர்களுடன் பிரிட்டிஷ் ராணுவத்தோடு மோதினார். பிரிட் டிஷ் ராணுவம் ஏற்படுத்திய சேதமும், அப்பாவி மக்கள் மீது நடத்தப்பட்ட அட்டூழியமான தாக்குதலும் அவரை நெகிழ வைத்தன.

மக்களைக் காப்பாற்ற வேண்டும் என்கிற கடமையுணர்வோடு தாமே வலியச் சென்று ராணுவத்திடம் சரணடைந்தார் அவர்.

கலவரம் செய்தார்' என்று குற்றம் சாட்டி அவருக்கு மரண தண்டனை விதித் தது பிரிட்டிஷ் அரசு. பொது இடத்தில் பலர் முன்னிலையில் மரண தண்டனை நிறைவேற் றப்பட்டது.

1857ம் ஆண்டு டிசம்பர் பத்தாம் தேதி யன்று இப்படி மக்களுக்காகவும் நாட்டுக் காகவும் தம்முடைய உயிரை அர்ப்பணித் தவர்தான் வீர் நாராயண் சிங். ஒரிஸ்ஸா வின் மகாநதி பள்ளத்தாக்குப் பகுதியில் பிறந்த நாராயண் சிங்கின் படுகொலையை ஒட்டி ரெய்ப்பூரிலிருந்த சிப்பாய்களும் பொது மக்களும் ஒன்று திரண்டு, ஹனு மான் சிங் என்பவரின் தலைமையில் கிளர்ச் சியைத் தொடங்கினார்கள். ஒரு பிரிட்டிஷ் அதிகாரி படுகொலை செய்யப்பட்டார். கிளர்ச்சியாளர்கள் பதினேழு பேர் மரண தண்டனை பெற்றார்கள்.

வீர் நாராயண சிங்கின் தியாகமும், கிளர்ச்சியாளர்களின் துயர முடிவும் இந்திய சுதந்திர இயக்கத்துக்குப் புதிய எழுச்சியை ஊட்டின.

வீர் நாராயண சிங் மரண தண்டனை பெற்றதை நினைவூட்டும் வகையில் பாரத அரசு அறுபது காசு அஞ்சல் தலை வெளி யிட்டுள்ளது. பீரங்கி வண்டியில் வைத்துக் கட்டப்பட்டு மரணத்தை எதிர்நோக்கி நிற் கிறார் கிழட்டுச் சிங்கம்.

— சுப்ர பாலன்

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளி யிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 4 3154 3, 4 34 157; ஆசிரியர் குழு அலுவலகம்: 4 34 14 5.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 280/—; விமானத் தபால் ரூ. 680/—.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 140/—; விமானத் தபால் ரூ. 340/—.

